


"ஆசீர்வாதமான இலங்கை தேசம்" (5) வாலிபர் விழா - 2016 (14)




# ஆசீர்வாதம்

"நீ எல்லாவற்றிலும் வாழ்ந்து சுகமாயிரு" பிரியமான ஆண்டு - 2015




காலை 10:00 மணிமுதல்
மாலை 6:00 மணிவரை
ஆலயம் திறந்திருக்கும்.

1180 Bellamy Road North
Scar., ON., MIH 1H2
Tel.: 416.438.5200
www.thmc.net
"Pastor Vinent"

இதழ் 24 | ஜூலை 2015 | ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபை | காலாண்டு பத்திரிகை



## உங்கள் வாழ்க்கையை அழகானதாய் மாற்றுவார்!

**"உன் வழியை கர்த்தருக்கு ஒப்புவித்து, அவர் மேல் நம்பிக்கையாயிரு"**
**- சங். 37: 5**

நாம் அனைவரும் வாழ்க்கையில் தீர்மானம் எடுக்க வேண்டியது அவசியம். எம்முடைய உறவுகளில், திருமண வாழ்க்கையிலே, பிள்ளைகளின் காரியத்திலே, அல்லது எம்முடைய நேரத்தை எப்படி உபயோகிக்க வேண்டும், எப்படிப்பட்ட வேலையைத் தெரிந்தெடுக்க வேண்டும், குடும்பத்தை நடத்த வேண்டும், பணத்தை சேகரிப்பதோ, செலவழிப்பதோ, சொத்துக்களை சேர்ப்பதோ சேர்ப்பதில்லையோ, கொடுப்பதிலோ, வாங்குவதிலோ இன்னும் இவை போன்ற பற்பல காரியங்களில் தீர்மானங்களை எடுக்க வேண்டியது அவசியமாக காணப்படுகின்றது. அநேக நேரங்களில் இப்படிப்பட்ட விடயங்களில், நாம் சரியான தீர்மானம் எடுக்க வேண்டியது அத்தியாவசியமானது. இதற்காகத்தான் தேவன் நம்மிடத்திலே "உன்னுடைய வழியை நீ என்னிடத்திலே ஒப்புவித்து நம்பிக்கையாயிருப்பாயானால், உன்னுடைய வாழ்க்கையை ஒரு சிறப்பான வாழ்க்கையாக மாற்றுவேன்" என்று சொல்கிறார்.

நான் ஜேர்மன் தேசத்திலே வாழ்ந்து கொண்டிருந்தவன். அங்குதான் நான் இயேசு கிறிஸ்துவை இரட்சகர் என்று அறிந்து என் வாழ்க்கையை அவருக்கு அர்ப்பணித்து என் வாழ்க்கையின் வழிகாட்டியாக விளங்க என் வாழ்வை அர்ப்பணித்தேன். அதிலிருந்து என்னுடைய வாழ்வில் அனுதினமும், பரிசுத்த வேதாகமத்தை தவறாது வாசித்து வந்தேன். அதன்பின்னர் அந்த வார்த்தையின்படி எனது வாழ்வில் செயல்பட ஆரம்பித்தேன். அனுதினமும் வேதம் வாசிப்பேன், அனுதினமும் ஜெபம் பண்ணுவேன். ஞாயிற்றுக்கிழமையில் தவறாது ஆலயத்திற்கு சென்று ஆராதிப்பேன். சபையிலுள்ள பெரியவர்களுடன் பழகி வந்தேன். எனக்குப் புரியாத காரியங்களை சபைப் போதகருடன் பகிர்ந்து கொண்டு ஆலோசனைகளைக் கேட்டு வந்தேன்.

இவைகளுக்கூடாகவே எனது வாழ்க்கை நாளுக்கு நாள், சமாதான வாழ்வாக, ஆசீர்வாதமான வாழ்வாக, செழிப்புள்ள வாழ்வாக மாறத்தொடங்கியது. ஏற்ற நேரத்திலே நல்ல வேலை கிடைத்தது. வீடு கிடைத்தது. வாகன வசதிகள் கிடைத்தது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக எனது வாழ்க்கைக்கு துணையாக ஒரு நல்ல மனைவியை தந்தார்.

இப்படிப்பட்ட வாழ்வை அனுபவித்துக் கொண்டிருக்கும் போது, ஜேர்மன் தேசத்தை விட்டு, எனது மனைவியுடன் சேர்ந்து கனடாவிற்கு செல்லும்படிக்கு அவருடைய ஆலோசனை கடந்து வந்தது. அதன்படி ஜேர்மனியிலிருந்து கனடா வருவதற்கு தீர்மானம் எடுத்தேன். இத்தீர்மானத்தை அநேக நண்பர்கள், தெரிந்தவர்கள், "நல்லதல்ல" என்று தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள். ஆனால் என்னை வழிநடத்திய போதகரும், தேவனோடு நடந்து வருகிறதாகிய பெரியார்களும், கர்த்தர் சொல்லுகிறபடி செய்யுமாறு என்னை உற்சாகப்படுத்தினார்கள். இறுதியில் நானும் என் மனைவியுமாக கனடா வந்து விட்டோம். இப்பொழுது கனடாவிலே நாங்கள் 21 வருடங்களாக வாழ்ந்து வருகின்றோம்.

இந்த 21 வருடங்களிலும் கனடாவில் எனது அனுபவங்களை பகிர்ந்து கொள்வதாயின், நான் ஜேர்மன் தேசத்தில் இருந்ததைப் பார்க்கிலும், ஆயிரம் ஆயிரம் மடங்கு, தேவன் எங்களை ஆசீர்வாதமாக மாற்றினார். பிள்ளைகளைத் தந்தார். சபையொன்றை ஸ்தாபிக்கச் செய்தார். பல மக்களை சபையில் ஆராதிக்க கூட்டிச் சேர்த்து வந்தார், கூட்டிச் சேர்த்து வருகிறார். கிளைச்சபைகளையும் ஸ்தாபிக்கச் செய்தார். மிஷனறி ஊழியங்களை செய்ய செய்தார். சொந்த வீட்டைத் தந்தார், வாகனங்களைத் தந்தார். உலகத்தின் பல பாகங்களிலும் அவருடைய சத்தியத்தை அறிவிக்க பயன்படுத்தி வருகின்றார். ஆகையாலே அவருடைய ஆலோசனைகளை பின்பற்றி அவருடைய வழியிலே நடப்போமானால், அவர் நம்முடைய வாழ்வை அழகுள்ள வாழ்வாக மாற்றுவார்.

(தொடர்ச்சி 2ம் பக்கம்)



## முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!

இலங்கை தேசம் இதுவரை சந்தித்ததைப் போன்ற ஒரு பேரழிவைச் இனிச் சந்திக்காமல் இன்னும் 25 வருடங்களில் ஆசீர்வதிக்கப்பட்டு, உலகம் முழுவதற்கும் ஆசீர்வாதமாக நிச்சயமாக மாறும்.

2014, ஒக்ரோபர் மாதம் 1ம் திகதி கர்த்தர் சொன்னபடியே, கொழும்பு சுகததாச அரங்கில் இலங்கை தேசத்தின் 25 மாவட்டங்களும் ஒன்றிணைந்து தேவனை நோக்கி நம் தேசம் வாழ்க்கைப்பட, அழிவிலிருந்து பாதுகாக்கப்பட, ஆசீர்வதிக்கப்பட, ஜெபம் ஏறெடுக்கப்பட்டது.

**தேவன் சொன்னதைச் செய்தோம்!**
**தேவன் தான் சொன்னதை செய்ய ஆரம்பித்துவிட்டார்.**

(விபரங்கள் 7ம் பக்கம்)

# கருத்து



கிறிஸ்துவுக்குள் எமக்கன்பானவர்களே!

ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபையிலிருந்து உங்கள் யாவருக்கும் அன்பின் வாழ்த்துக்களைக் கொண்டு வருகின்றோம்.

ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபையும், ஊழியங்களும் ஆரம்பிக்கப்பட்டு 20 வருடங்களை கடந்து செல்ல தேவன் எங்களுக்கு கிருபை செய்தார். இந்த இரண்டு சகாப்தங்களிலும் தேவன் எங்களை கண்ணின் மணிபோல பாது காத்து வந்தார். இக்காலங்களில் அவர் எங்களுக்கு கொடுத்த ஊழியங்களை சிறப்பாகச் செய்து முடிக்கவும்,. தொடர்ந்து அவருடைய ஊழியங்களைச் செய்யவும் பெலனாக விளங்குகின்றார். இந்நாள்வரையும் ரொறன்ரோ, மிசிசாகா, மொன்றியல் பகுதிகளிலும், மற்றும் ஜேர்மனி, மலேஷியா தேசங்களிலும் இவ்வூழியங்களை விஸ்தாரமாக்க தேவன் அனுக்கிரகம் செய்தார். இந்த ஊழியங்களுக்கூடாக அநேக மக்களை இரட்சித்து, விடுதலையாக்கி, குணமாக்கி, சபைகளிலே சேர்த்து, அவர்களை ஆசீர்வதித்து வருகின்றார். இதே போன்று இலங்கை, இந்திய தேசங்களிலும், பல மிஷனறி ஊழியங்களைச் செய்யும்படியும், ஊழியங்களுக்கு ஒத்தாசையாக இருக்கும்படியாகவும் தேவன் எம்மை நடத்தி வருகின்றார்.

குறிப்பாக இலங்கை தேசத்தை முழு உலகத்துக்கும் ஆசீர்வாதமான தேசமாக மாற்றும்படியாக கடந்த நான்கு வருடங்களாக தேவன் எம்மை நடத்தி வந்தார். இதன் நிமித்தமாக தீவிரமாக இலங்கை தேசத்திலே ஊழியங்களைச் செய்து கொண்டு வந்தோம். அதன்பலனாக 25 மாவட்டங்களிலும் நற்செய்திக் கூட்டங்களை நடத்தச் செய்து, அக்கூட்டங்களுக்கூடாக அநேக மக்களை இரட்சித்து, குணமாக்கினார். அநேகரை பாவ, சாப வல்லமைகளி லிருந்து விடுதலையாக்கி ஆசீர்வதித்தார். அதேபோன்று அநேக விசுவாச குடும்பங்களை, வாலிபர்களை கூட்டிச் சேர்த்து, அவர்களை பெலப்படுத்தி, அவர்களுடைய வாழ்க்கையை மாற்றி எதிர்கால நோக்கோடு வாழ உதவி செய்தார். அதேபோன்று அநேக போதகர்களை ஒன்றுகூடச் செய்து தேசத்தை ஆசீர்வாதமாக்கும் திட்டங்களை காணச் செய்தார். அதுமட்டுமல்லாமல் பல மாவட்டங்களைச் சுற்றி, ஜெப யாத்திரைகளை நடத்தி தேசத்தின் ஆசீர்வாதத்திற்காக ஜெபம் பண்ணச் செய்து பட்டணங்களை ஆசீர்வதித்தார்.

அதிலும் குறிப்பாக கடந்த 2014, ஒக்ரோபர் மாதம் 1ம் திகதி இலங்கை தேசத்தின் 25 மாவட்டங்களில் இருந்தும், பல வெளிநாடுகளில் இருந்தும் போதகர்களை, கொழும்பு, சுகததாச உள்ளரங்கிலே கூட்டிச் சேர்க்க உதவி செய்தார். ஒன்றாக கூடி வந்த அனைத்துப் போதகர்களும் ஒருமனப்பட்டு, இலங்கை தேசத்தின் ஆசீர்வாதத்திற்காகவும், எதிர்காலத்தில் முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான தேசமாக இருக்கவும் ஜெபம் பண்ணச் செய்தார்.

அத்தோடுகூட இலங்கை தேசத்தில் இருக்கும் வாலிபர்களின் எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு, அவர்களை தரிசனமுள்ள தலைவர்களாக பயிற்றுவிக்கும் படிக்காக பயிற்சிசாலை ஒன்றை அமைக்கவும் கர்த்தர் உதவி செய்து வருகிறார்.

இப்படியாக கர்த்தர் பலவிதமான ஊழியங்களை தந்து, அவைகளைச் செய்யவும் உதவினார். அவருக்கே எல்லா மகிமையும் உண்டாகட்டும்.

மேலும் வருகின்ற வருடம் இலங்கையிலுள்ள 25,000 வாலிபர்களை ஓரிடத்திலே 3 நாட்கள் அழைத்துக் கொண்டு வந்து தங்க வைத்து, அவர்களை எதிர்காலத்தில் ஆசீர்வாதமான வாலிபர்களாக விளங்கச் செய்வதற்காக பயிற்றுவிக்கப்பட ஒரு பாரத்தைக் கொடுத்திருக்கின்றார். இதற்காக எங்களுடன் இணைந்து ஜெபியுங்கள்.

மட்டுமல்லாமல் இந்த 2015, ஜுலை மாதம் 3ம் திகதி முதல் 5ம் திகதிவரை ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபையின் 20வது நிறைவாண்டு விழாவை, ஆசீர்வாத இல்லத்தில் கொண்டாடவுள்ளோம். இதற்காக தேவ ஊழியரான போதகர் டில்குமார் அவர்கள் டுபாய் தேசத்திலிருந்து வரவழைக்கப்படுகின்றார். இந்நாட்கள் ரொறன்ரோவிலும், ரொறன்ரோவை சுற்றியுள்ள பட்டண மக்களுக்கும் ஆசீர்வாதமாக அமைய ஜெபம் பண்ணுங்கள். அத்துடன் நீங்களும் வந்து பங்குகொண்டு ஆசீர்வதிக்கப்படுங்கள்.

கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக.

அன்புடன்
கிறிஸ்துவின் பணியில்

பாஸ்டர் வின்சன்ட் சகாயநாதன்




ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபையினால் இலவசமாய்
வெளியிடப்படும் காலாண்டுப் பத்திரிகை

தொடர்புகளுக்கு:

Rev. Vincent Sahayanathan
1180 Bellamy Road North
Scarborough, ON
M1H 1H2,
Canada

416 . 438 . 5200/ 416 . 289 . 3662
Fax. : 416 . 289 . 2775
Email: info@thmc.net
Website : www.thmc.net
Facebook : "Pastor Vincent"

# உங்கள் வாழ்க்கையை அழகானதாய் மாற்றுவார்!

(1ம் பக்க தொடர்ச்சி)

இந்நாட்களிலே நான் அடிக்கடி ஜேர்மன் தேசத்துக்கு எமக்கு ஒரு கிளைச்சபை இருப்பதால் போய் வருவதுண்டு. நான் அவ்வாறு செல்லும்போது, என்னுடைய பழைய நண்பர்களைச் சந்தித்து அவர்களுடன் எங்கள் சாட்சிகளை பகிர்ந்து கொள்வது வழக்கம். அந்நாட்களில் ஜேர்மன் தேசத்திலிருந்து கனடாவுக்கு நான் புறப்படும் நாட்களிலே "இது நல்லதல்ல" என்று எண்ணிய நண்பர்கள், இப்பொழுது என்னுடைய வாழ்விலே உண்டாகியிருக்கின்ற சாட்சிகளை கேள்விப்படும்பொழுது, "நீங்கள் தேவனுக்கு கீழ்ப்படிந்து, அவர் சொன்னதைச் செய்ததால் எவ்வளவு ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறீர்கள்" என்று கூறி தேவனை மகிமைப்படுத்துவார்கள்.

**"நான் உனக்குப் போதித்து,**
**நீ நடக்க வேண்டிய வழியை**
**நான் உனக்குக் காட்டுவேன்"**

**— சங். 32 : 8**

ஆகையால் தான் தேவன் சொல்லுகிறார் : "நான் உனக்குப் போதித்து, நீ நடக்க வேண்டிய வழியை நான் உனக்குக் காட்டுவேன்". "தேவன் தம்மைப் பின்பற்றுகிறவர்களை தாமே நடத்தி, அவர்களுக்கு வழிகாட்டி வருகின்றார். வேதத்திலே எபேசியர் 5 : 17ம் வசனத்தில் அவருடைய "சித்தத்தை நாம் அறிய வேண்டும்" என்று அவர் வாஞ்சிக்கிறார். என்பதை நாங்கள் அறிய முடியும். ஏனெனில் அவர் நாம் யாராயிருப்பினும், நம் ஒவ்வொருவர் மேலும் தனிப்பட்ட முறையில் அன்புக்கூடாக தம் செயலை வெளிப்படுத்துகிறார், பெரிய காரியங்கள் ஆயினும், சிறிய காரியங்களாயினும், நம்முடைய வாழ்க்கையைக் குறித்து அவரிடத்தில் ஒரு திட்டமுண்டு. தேவனுடைய சித்தத்தை நாம் அறிய வேண்டும் என்று விரும்புகின்றார். அவருடைய சித்தத்தின்படி நம்முடைய வாழ்க்கைக்கு ஏதுவாக, நன்மையும், பிரியமும், பரிபூரணமுமான, அருமையான திட்டங்களை அவர் நமக்காக உண்டு பண்ணி வைத்திருக்கின்றார்.

இன்று அநேக மக்கள் கவலைப்படுகிறார்கள். பயப்படுகிறார்கள். சமாதானமில்லாமல் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள். சந்தோஷமில்லாமல் வாழ்ந்து கொண்டிருக்கின்றர்கள். குழப்பமான நிலையில் காணப்படுகிறார்கள். அடுத்த முயற்சி என்ன என்று தெரியாது இருக்கின்றார்கள். எனவே தான் வேத வசனத்தில் தேவன், "நான் உங்கள் மேல் நினைத்திருக்கிற நினைவுகளை அறிவேன்" என்கின்றார். எரேமியா 29:11 தேவன் நம்மைக் குறித்து வைத்திருக்கிற நன்மையான நோக்கங்களை நாம் அறியாமல் இருப்பதே இவைகளுக்கு காரணமாயிருக்கிறது.

நாம் தேவனுடைய சித்தத்தை எப்படி அறியத்தொடங்குகிறோம். அவர் தந்த வேத வசனத்தை நாம் படிப்பதனால் அவருடைய சித்தம் நம்முடைய வாழ்விலே தெரிய வருகிறது. அவரை நோக்கி நாம் ஜெபிக்கும்பொழுது, அவருடைய சித்தம் எமது வாழ்விலே தெரிய வருகிறது. நாம் அவருடைய திருச்சபையிலே வந்து, அவரை ஆராதிக்கும்போது, அவருடைய சித்தம் நமக்கு தெரிய வேண்டி வருகின்றது. சபையிலே போதகருக்கூடாக அவருடைய வசனத்தை கேட்கும்போது அவருடைய சித்தம் நமக்கு தெரிய வேண்டி வருகின்றது. நாம் ஆங்காங்கே உபவாசக்கூட்டம், ஜெபக்கூட்டம் போன்றவற்றில் கலந்து கொள்ளும்போது, அவருடைய சித்தம் நமக்கு தெரிய வேண்டி வருகின்றது. அவ்வேளைகளிலே உங்களுடைய வாழ்விற்கு எது அவசியமானது என்பதை அவர் உங்களுக்கு உணர்த்துகின்றார். எதை நீங்கள் செய்ய வேண்டும், எதை நீங்கள் விட்டு விட வேண்டும் என்று அவர் வேத வசனங்களுக்கூடாக உங்களுடனே பேசிகின்றார். நீங்கள் அந்த நேரத்திலே தீர்மானம் எடுத்து, உங்கள் வாழ்வில் கைவிட வேண்டியவற்றை விட்டு, சரியானதைச் செய்யத் தீர்மானம் எடுக்க ஒப்புவிக்கும்பொழுது, கர்த்தர் உங்களை தன் வார்த்தையின்படி அவர் வழிகளிலே நடத்தி, அவருக்குப் நன்மையான, பிரியமான, பரிபூரணமான, ஆசீர்வாதமான திட்டங்களை அவர் செய்து முடிப்பார்.

(தொடர்ச்சி 3ம் பக்கம்)

உங்கள் வாழ்க்கையை (2ம் பக்க தொடர்ச்சி)

## தேவன் தம்முடைய தயவுள்ள சித்தத்தின்படி விருப்பத்தையும் செய்கைகளையும் உங்களிலே உண்டாக்குகிறவராயிருக்கிறார்''

## – பிலிப்பியர் 2:13

தேவன் தம்முடைய தயவுள்ள சித்தத்தின்படி விருப்பத்தையும் செய்கைகளையும் உங்களிலே உண்டாக்குகிறவராயிருக்கிறார் என்று வேதம் சொல்லுகின்றது. தேவனுடைய வழிநடத்தல் ஒவ்வொருவருடைய .வாழ்விலும் வித்தியாசமாக அமைகின்றது. நாம் ஆண்டவர் இயேசுவையும், அவருடைய வார்த்தையையும் விசுவாசித்து ஏற்றுக்கொள்ளும்போது, தேவனுடைய ஆவியானவர் நமக்குள்ளே வந்து வாசம் பண்ணிவிடுகின்றார். அந்த பரிசுத்த ஆவியானவர், தேவனுடைய வார்த்தையின்படி, அவருடைய சித்தத்தை அறியவும், அதன்படி நடக்கவும் அவர் நமக்குப் பெலன் தருகின்றார். பரிசுத்த ஆவியானவருடைய உதவியன்றி, அவருடைய வார்த்தையின்படி செயல்படவோ, அதன் பலனை அடையவோ முடியாது.

நான் அறிய எத்தனையோ பேர் “வேதாகமத்தை நம்புகிறோம்'' என்று சொல்லுகிறார்கள். ஆனால் அதன் பலனை அனுபவியாமல் இருக்கின்றார்கள். எத்தனையோ பேர் “ஆலயத்திற்கு போகிறோம்'' என்று சொல்கின்றார்கள். ஆனால் அவர்களுடைய வாழ்க்கையில் எந்த நன்மையும் இல்லை. காரணம், வேதத்தை நாம் ஒரு கதைப்புத்தகத்தைப் போன்று வாசிக்க முடியாது. சபையை நாம் இன்னுமொரு வர்த்தக நிலையத்தைப் போன்று எண்ணவும் முடியாது. வேதம் வாசிப்பதும், சபைக்குப் போவதும், ஒரு வைத்தியனிடத்திலே ஒரு நோயாளி சென்று, தன் வியாதியில் இருந்து விடுதலை அடைவதற்கு, ஆலோசனைகளையும், வைக்கப்படும் திட்டங்களையும், நடக்க வேண்டிய விதிமுறைகளையும் கைக்கொண்டு சுகமடைவது போலாகும். உதாரணமாக: ஒரு நோயாளி ஒரு வைத்தியனிடத்திலே செல்கின்றார் என்று வைத்துக் கொள்வோம். “வைத்தியரே என்னுடைய முதுகுத் தண்டிலே ஒரு பயங்கரமான வலி இருக்கின்றது. நான் இருக்கும்போதும், நடக்கும்போது, படுக்கும்போதும் மிகவும் வேதனைப்படுகிறேன். இதிலிருந்து நான் விடுதலையடைய விரும்புகிறேன் என்று சொல்லுகிறார். அந்நேரம் பார்த்து, அந்நோயாளியின் கைத்தொலைபேசிக்கு ஒரு அழைப்பு வருகிறது. உடனே அந்த நோயாளி வைத்தியரைப் பார்த்து, “இவ்வளவு நேரமும் பொறுமையாக எனது பிரச்சனைகளைக் கேட்டீர்கள். உங்கள் பொறுமைக்கும் நேரத்திற்கும் நன்றி'' என்று கூறிவிட்டு எழுந்து கடந்து போய் விடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த நோயாளி குணமாகிவிடுவாரா? ஒரு போதும் குணமாக முடியாது.

மேற்குறிப்பிட்ட இந்த உதாரணத்தைப் போன்றுதான் இன்று அநேகர் இருக்கின்றார்கள். உச்சத்தலைமுதல் உள்ளங்கால் வரைக்கும் பிரச்சனைகளோடே வாழ்கின்றார்கள். குடும்பத்தில் பிரச்சனை, வாழ்க்கையில் பிரச்சனை, பொருளாதாரத்தில் பிரச்சனை, சரீரத்தில் பிரச்சனை... இப்படி நாம் சொல்லிக் கொண்டே போகலாம். காரணம் என்ன? இன்று மக்கள் தேவனையும் அவருடைய வார்த்ஜதயையும் குறித்து என்னவிதமான நம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தே இருக்கிறது.

**உங்கள் வாழ்க்கையை அழகானதாய் மாற்றுவார்!**

மேலே சொல்லப்பட்ட நோயாளிக்கும் மருத்துவருக்கும் இடையில் நடந்த உரையாடலைப் போல, உதாரணத்துவத்தைப் போல, கடவுளிடம் தங்கள் பிரச்சினைகளை சொல்லிக்கொண்டே போய் கொண்டிருக்கிறார்கள். மருத்துவர் அவ்வியாதியிலிருந்து விடுதலையடைவதற்கு என்ன செய்ய வேண்டும் என்கிறார் என்பதை கேட்க மனம் இல்லை. இப்படி போகின்றவர்களுக்கு இறுதியில் வெறுமையும் மரணமும் தான் சம்பவிக்கும்.

என்னுடைய கடந்த காலங்களில் நான் தேவனை அறிந்து வாழத் தொடங்கும்போது, தேவனுடைய ஆவியானவர், பல இடங்களில், பல சூழ்நிலைகளில், என் தீர்மானங்களை கட்டுப்படுத்தி, என்னை அவர் சித்தத்தின்படி நடத்தி வந்தார். அவருடைய தீர்மானத்திற்கு என்னை நான் அர்ப்பணித்ததே இன்றைக்கு என்னுடைய வாழ்க்கைக்கு தகுதியாக அமைகின்றது. ஒரு முறை, நான் இயேசுகிறிஸ்துவை சொந்த இரட்சகராய் ஏற்றுக் கொண்ட பின்பு 6 மாத காலத்தில் நடந்த ஒரு சம்பவத்தை உங்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்புகின்றேன்.

ஜேர்மன் தேசத்திலே இருக்கும்பொழுது, அரசாங்கத்தால் எங்களுக்கு நியமிக்கப்பட்ட Lager இல் (அகதிகளை தங்க வைப்பதற்கான சிறு விடுதி) அங்கே வசித்து வந்தேன். அந்த இடத்திலே என்னோடு கூட வாலிபர்களும், நடு வயதுடைய பெரியோர்களும் தங்கியிருந்தார்கள். அவர்கள் களியாட்டை விரும்புகின்றவர்கள். குடித்து, வெறித்து களியாட்டுகளில் ஈடுபட்டு வந்தவர்கள். நானோ, வேதத்தைப் படிப்பதிலும், ஜெபிப்பதிலும் நாட்டமாக இருந்தேன். அவர்கள் மது அருந்துமிடங்களிலேயோ, களியாட்டுகள் நடைபெறும் இடங்களிலேயோ நான் கலந்து கொள்வதை தவிர்த்து இருந்தேன். இப்படியான நாட்களில் ஒரு நாள் அவர்கள் இருக்கும் அறைக்கு என்னை அழைத்தார்கள். நான் அங்கு சென்ற போது என்னை மது அருந்தும்படிக்கு வற்புறுத்தினார்கள். என்னை பல வந்தப்படுத்தி, இறுகப் பிடித்து, மதுபானத்தை எனது தலையிலே ஊற்றினார்கள். அவ்வேளையிலே 6 மாத காலமாக என்னை விட்டிருந்த கோபம், எனக்குள் மிக வேகமாக இமைப்பொழுதிலே என்னை மேற்கொண்டது. அவ்வேளையில் ஒலிபெருக்கியைப் பார்க்கிலும் ஆயிரம்மடங்கு கொண்ட அதிகமான ஒரு சத்தம் என் காதில் தொனித்தது. “வின்சன்ட் வெளியே போய்விடு'' (அது தேவ ஆவியானவருடைய சத்தம் என்பதை நான் பின்னர் உணர்ந்து கொண்டேன்.) அந்த நிமிடமே நான் வெளியில் சென்று விட்டேன். அந்த சத்தத்துக்கு நான் என்னை அர்ப்பணியாமலும் நான் வெளியே செல்லாமலும் இருந்திருப்பேனாகில் நிச்சயம் நான் அந்த மனிதனுக்கு அடித்திருப்பேன், கட்டாயம் காயப்படுத்தி இருப்பேன். நிச்சயமாக பொலிஸார் வந்திருப்பார்கள். காரியங்களை விசாரித்திருப்பார்கள். அவர்கள் குற்றவாளிகளாய் காணப்பட்டாலும், நான் அவர்களுடைய அறையில் வந்து அவர்களுக்கு எதிராய் செயல்பட்டபடியினாலே, நான் குற்றவாளியாக காணப்பட்டிருப்பேன், சிறையில் அடைக்கப்பட்டிருப்பேன். இலங்கைக்கு மறுபடியும் திருப்பி அனுப்பப்பட்டிருப்பேன். கனடா வந்திருக்கவும் மாட்டேன். என் வாழ்க்கை இவ்விதமாய் ஆசீர்வாதமாய் இருந்திருக்க முடியாது.

அன்றைக்கு நான் தேவனுடைய சத்தத்திற்கு கீழ்ப்படிந்தபடியால் இன்றைக்கு அப்படிப்பட்ட ஆபத்துக்களுக்கும் சூழ்நிலைகளுக்கும் பாதுகாக்கப்பட்டு, என்னுடைய வாழ்வு ஒரு பிரயோஜனமுள்ள வாழ்வாக மாற்றப்பட்டிருக்கின்றது.

அதுபோலவே நீங்களும், தேவனிடத்தில் வந்து அவருடைய வழிகளுக்கு ஒப்புக்கொடுத்து, அவருடைய ஆலோசனைகளை கவனித்து, யோசித்து, உங்களுடைய சூழ்நிலைகளை அடையாளம் கண்டு, அவர் சொல்லுகிறபடி நீங்கள் உங்கள் வாழ்வை ஒப்புக்கொடுப்பீர்களானால், அவர்தாமே எல்லாத்தீமைகளின்றும் உங்களை விடுவித்து, உங்களுடைய வாழ்வை அழகானதாக மாற்றுவார். **ஆமென்.**




### Branch Churches

**Frankfurt Harvest Church**
Nibelungenallee 54,
60318 Frankfurt,
Germany

**Montreal Harvest Missionary Church**
12301 Rue Colin, Pierrefonds
Montreal, QC, H9A 1C3,
Canada
(St Barnabas Anglican Church)

**Mississauga Harvest Missionary Church**
2570 Haines Road, Unit 1A,
Mississauga, ON., L4Y 4A3,
Canada

Contact : 416-438-5200/ 416-298-3662
Fax : 416-289-2775

website : www.thmc.net
email. : info@thmc.net

# ஜீவிய சாட்சிகள்



கர்த்தருடைய நாமம் மகிமைப்படுவதாக, கர்த்தர் என்னை சாட்சியாக இவ்விடத்தில் நிறுத்திய கிருபைக்காய் அவரை ஸ்தோத்தரிக்கிறேன். கடந்த 2004ம் ஆண்டு ஏற்பட்ட கல்லீரல் வியாதியின் நிமித்தம் கடந்த 10 வருடங்களாக நோயுற்றிருந்த என்னுடைய சரீரத்திற்கு புதிய ஜீவன் தந்து என்னை உயிரோடு உங்கள் முன் சாட்சியாக நிறுத்திய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இன்றும் ஜீவிக்கிறார். "தாயின் கருவில் உருவாகு முன்னே உன்னை தெரிந்துகொண்டேன்" என்ற அவருடைய ஜீவ வார்த்தை என் வாழ்வில் புது ஜீவனைத் தந்தது. என்னுடைய கல்லீரல் மாற்று சிகிச்சைக்காக பல இடங்களில் எனக்கு ஏற்ற ஒரு கல்லீரலை தேடினோம் அதேசமயம் என்னுடைய மகள் தன்னுடைய கல்லீரலை எனக்கு வழங்கும்படி அவளும் சத்திரசிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டு, போராடி அது பலனளிக்காத நிலையில் என்னுடைய மகளை கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பாதுகாத்தார். பலவித வேதனைகள், போராட்டங்கள், அடுத்து என்ன செய்வதென்று தெரியாத நிலை ஆனாலும் ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து கடந்த December 21st 2013 ம் ஆண்டு அவரை எங்கள் வாழ்க்கையில் சொந்த இரட்சகராக குடும்பசகிதம் ஏற்றுக்கொண்டோம். அவர் என்னுடைய பாவங்களை மன்னித்து புதிய ஜீவன் தந்தார். எத்தனையோ நபர்கள் இப்படிப்பட்ட சத்திரசிகிச்சைக்காக காத்து நின்ற வேளையிலும், இயேசு கிறிஸ்து என்மேல் வைத்த அன்பின் நிமித்தமும், அவருடைய கிருபையினாலும் என்னுடைய கல்லீரல் சத்திர சிகிச்சைக்காக June 4th 2014 அன்று எனக்குரிய பொருத்தமான கல்லீரலை அன்ரனி என்ற 22 வயதுடைய ஒரு வாலிபனுக்கூடாக எனக்கு கொடுத்து அற்புதவிதமாக சுகம் கொடுத்தார். அத்தோடு அந்த சகோதரனையும் பாதுகாத்தார். நான் ஆராதிக்கிற இயேசுகிறிஸ்து நேற்றும், இன்றும், என்றும் ஜீவிக்கிறார். அவர் ஒருவருக்கே துதி கன மகிமை உண்டாவதாக.

**– செல்வநாயகம் செல்லையா**

கடந்த வருடம் நடந்த வைத்திய பரிசோதனையில் எனது நெஞ்சுப் பகுதியில் ஒரு சிறு கட்டி ஏற்பட்டிருப்பதாக வைத்தியர்கள் கூறினார்கள். ஆனாலும் நான் சபையில் வந்து ஜெபித்து விட்டு இறுதி வைத்திய சோதனைக்காக சென்றிருந்தேன். அப்பொழுது எல்லாவித சோதனைகளின் பின்னர், அப்படி ஒரு கட்டி இருப்பதாக தெரியவில்லை என்று வைத்தியர்கள் கூறிவிட்டார்கள்.

மீண்டும் இந்த வருடத்திலே வைத்திய சோதனைகள் நடந்தபோது, அதேபோன்று ஒரு கட்டி இருப்பதாக கூறினார்கள். தொடர்ந்தும் நான் விசுவாசத்துடன் வந்து சபையில் ஜெபித்து விட்டுச் சென்றேன். அதற்கு பின்பு நடந்த வைத்திய பரிசீலனையில் எவ்வித மான கட்டியும் இல்லை என்று வைத்திய அறிக்கை கொடுத்திருக்கின்றார்கள். எங்கள் தேவன் எம்மை ஒருபோதும் கைவிடமாட்டார். தேவன் எமக்கு அற்புதமாக எல்லாவற்றையும் மாற்றி, தெய்வீக சுகம் தந்ததற்காய் கர்த்தரை ஸ்தோத்தரிக்கின்றேன்.

**– சகோதரி மஞ்சு சுந்தரலிங்கம்**

நம்முடைய தேவனாகிய கர்த்தருடைய நாமத்திற்கு ஸ்தோத்திரம். நாம் நினைப்பதற்கும் வேண்டுவதற்கும் மிகவும் அதிகமாய் கிரியை செய்கிற ஆண்டவர் இயேசு, இந்த ஆண்டிலுமாய் எங்களுக்கு வசதியான, அழகான வீடொன்றை வாங்கி, குடியிருக்க நன்மை செய்ததற்காக தேவனுடைய நாமத்தை உயர்த்துகிறோம்.

**– சகோதரி ஜமுனா பாலேந்திரன்**



என் தேவனுக்கு மகிமை உண்டாவதாக. நான் தவறுதலாக வழுக்கி விழுந்ததில் எனது இடது காலில் முறிவு ஏற்பட்டபோது, என் தேவனை நோக்கி ஜெபித்தேன். அப்போது தேவன் என் ஜெபத்தைக் கேட்டார், என்னை குணப்படுத்தினார், அதற்காக என் தேவனுக்கு கோடான கோடி நன்றிப்பலிகளை செலுத்துகின்றேன். எல்லா மகிமையையும், கனத்தையம் ஸ்தோத்திரத்தையும் என் தேவனுக்கே செலுத்துகிறோம்.

**– அன்ரனி ராகேல்**





தேவனுடைய பரிசுத்த நாமத்திற்கே மகிமையும் கனமும் செலுத்துகின்றேன். வாக்கு மாறா தேவன், இந்த வருடத்தில் எமக்குத் தந்த வாக்குத்தத்தத்தின்படி எங்கள் குடும்பத்தை ஆசீர்வதித்து, எங்களைத் தமது செட்டையின் கீழ் மூடி மறைத்து, ஆரோக்கியத்தையும் பெலனையும் தந்து பிரயாணங்களிலும்கூட இருந்து எம்மை பாதுகாத்துக் கொண்டதற்காய் தேவனுக்கு நன்றி சொல்லுகிறோம்.

இரவு நேர வேலையினால் பலவிதங்களில் பாதிக்கப்பட்டிருந்த என் கணவருக்கு பகல் நேர வேலை கிடைக்க வேண்டும் என்று செய்த விண்ணப்ப ஜெபத்தின் படியே, தேவன் அதிசயவிதமாக பகல் நேர வேலை கிடைக்கச் செய்தார்.

எனக்கு எலும்புத் தேய்வு (Ostioprosis) நோய் காணப்பட்டதனால் உடலில் அநேக பிரச்சனைகள், கையைக்கூட மேலே தூக்க முடியாது. எனக்கு injection அவசரமாக போட வேண்டும் என்று Specialist இடம் குடும்ப வைத்தியர் அனுப்பினார். நான் வாக்குத்தத்தங்களை வைத்து விசுவாசத்தோடு ஊக்கமாக ஜெபித் தேன். என்ன ஆச்சரியம்! எனக்கு மருந்தே தேவையில்லை என்றும், கல்சியம் மாத்திரை மாத்திரம் எடுத்தால் போதும் என்று வைத்தியர்கள் சொல்லி விட்டார்கள். அதே போல் எனக்கு இரத்தத்தில் Sugar இருப்பதாக கூறி குளுக்கோஸ் பரிசோதனைக்கு அனுப்பினார்கள். என் வேண்டுதல் விண்ணப்பத்தைக் கேட்டு, தேவன் எனக்கு Sugar வியாதி இல்லை என்ற அறிக்கை கிடைக்க அற்புதம் செய்து, என் விசுவாசத்தைக் கனப்படுத்தினார்.

இன்னுமாக என் பிள்ளைகளுடைய வாழ்க்கையிலும் அவர்களைச் சகல வழிகளிலும் ஆசீர்வதித்து, சம்பள உயர்வையும், வேலை உயர்வையும் கொடுத்து உயர்த்தினார். ஆவிக்குரிய, பூமிக்குரிய ஆசீர்வாதங்களால் எம்மை ஆசீர்வதித்து, மனநிறைவைத் தந்த தேவனுக்கே கோடா கோடி நன்றிகளைச் செலுத்துகிறோம்.

**- Florence Anton**



Praise be to God.

When Pastor said this year would be the year of blessing, to be honest I did not take so seriously.

I Thought God had already blessed me, helped me finish my school, pass my licensing exam and get a job right away all in the previous year. One of my goals has been to work in the ICU and assumed it would take a couple of years for me to get a job there.

However all praises go to our Almighty Father as he provided me with an ICU job within 10 months of working as a nurse and God made it so that my employer paid for the extra education required to work in this field. I am so grateful for all these blessings. Our God has great plans for us that you and I cannot imagine.

**- Madhurshi Mohanarajah**

# கிருபையுடன் நடந்து வந்த 20 ஆண்டுகள்!...




கர்த்தருடைய அனாதி திட்டத்தின்படியே ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபை ஆரம்பிக்கப்பட்டு, 20 ஆண்டுகள் கிருபையாக கடந்து சென்றுவிட்டன. இந்த 20 ஆண்டுகளிலே அனுதினமும் ஆண்டவர் இயேசுவை அறியாதிருந்த அநேகரை சபைக்குள்ளே கூட்டிச் சேர்த்தார். ரொறன்ரோ, மிசிசாகா, மொன்றியல், மலேஷியா, ஜேர்மனி போன்ற இடங்களில் கிளைச்சபைகளை ஸ்தாபிக்கவும், இலங்கை, இந்தியா போன்ற நாடுகளில் ஊழியங்களைச் செய்யவும் கர்த்தர் கிருபை அளித்தார். வானொலி மற்றும் ஐரோப்பாவிலே Holy God TV கனடாவிலே TET தொலைக்காட்சிகளுக்கூடாகவும், தேவ அன்பை பகிர்ந்து கொள்ள தயை செய்துள்ளார். அது மட்டுமல்லாமல் பத்திரிகை ஊழியம், வெப் ஊழியம் என தேவனுடைய இராஜ்யத்தின் வளர்ச்சிக்காக சபையாராக அனுதினமும் செயற்பட எம்மை கர்த்தர் நடத்தி வருகின்றார். தேவனுக்கே மகிமை உண்டாவதாக.





ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபை தேவ ஊழியர்கள்!



ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபையார்




சிறுவர் ஊழியம்




வருடந்தோறும் ஒக்ரோபர் 31ம் திகதி
சிறுவர்கள் மகிழ "அல்லேலூயா தினம்"



வாலிபர் ஊழியம்




கிறிஸ்மஸ், ஈஸ்டர் நிகழ்வுகள்

## கிளைச்சபைகள்





பிராங்பேர்ட், ஜேர்மனி



மலேஷியா



மொன்றியல், கனடா



மிசிசாகா, கனடா









2015, ஏப்ரல் 26ம் திகதி ஞாயிற்றுக்கிழமையன்று மிசிசாகா கிளைச்சபைக்கான புதிய கட்டிடம் பிரதிஸ்டை பண்ணப்பட்டு திறந்து வைக்கப்பட்டது.



ஒன்றுகூடல் ஐக்கியமும்
விளையாட்டுப் போட்டிகளும்




திருச்சபையின்
பாடல் குழுவினர்



குழந்தைகளுக்கான
பிரதிஸ்டை



கர்த்தருக்குள் திருமண பந்தத்தில்
இணைக்கப்படுகின்றார்கள்.



முழுக்கு ஞானஸ்நானம் பெற்று
மறுபடியும் பிறக்கும் வாலிபர்கள்

(தொடர்ச்சி 12ம் பக்கம்)



# I made you!
# I bought you!

# மீட்பின் கிரயம்!

ஒரு படகோட்டி இருந்தான். அவனுக்கு ஒரு அருமையான மகன் இருந்தான். தந்தையைப் போல தானும் படகோட்ட வேண்டும் என்ற விருப்பத்துடன் மிகவும் உறுதியானதும் அழகானதும், பலவர்ணமானதுமான சிறு விளையாட்டுக் கப்பலைச் செய்தான். அதை தினமும் ஓடும் தண்ணீரில் விட்டு விளையாடு வதையே தனது பொழுது போக்காக கொண்டிருந்தான்.

ஒருநாள் தந்தை வேலைக்குச் செல்லும்போது, தனது மகனையும் அழைத்துச் சென்றார். மகனும் தான் எப்பொழுதும் விளையாடும் தனது சிறிய கப்பலை எடுத்துக்கொண்டு தந்தையோடு மகிழ்ச்சியுடன் புறப்பட்டுச் சென்றான். தந்தை தனது படகை மெதுவாக செலுத்திக் கொண்டிருக்கும்போது, மகனும் தனது விளையாட்டுக் கப்பலை தண்ணீரில் செலுத்தி விளையாடிக் கொண்டிருந்தான். அப்போது திடிரென அடித்த பலத்த காற்றினால், தண்ணீரின் வேகம் அதிகரிக்கத் தொடங்கியது. அந்நேரத்தில் தந்தை படகை செலுத்துவதற்கு சிரமப்பட்டுக் கொண்டிருந்த வேளையிலே மகனுடைய சிறிய படகு தண்ணீரால் அடித்துச் செல்லப்பட்டது. அதை எடுப்பதற்கு எவ்வளவு முயன்றும் தண்ணீரின் வேகத்தில் அது தொலைதூரம் கடந்து சென்றுவிட்டது. அந்த மகன் அதைப் பிரியமாய் செய்தபடியினாலே படகினுடைய இழப்பின் நிமித்தமாய் மிகவும் துக்கத்துடன் வீடு வந்து சேர்ந்தான். மறுநாளிலும் ஒரு வேளை அந்தப் படகு கரை ஒதுங்கியிருக்கும் என நினைத்து அந்த ஏரிக்கரை ஓரமாக தேடிச் சென்றான். ஆனாலும் அது அகப்படவில்லை.

நாட்கள் கடந்து சென்றன. ஒரு நாள் மகன் கடைத்தெரு பக்கமாய் நடந்து சென்ற பொழுது, ஒரு கடையிலே தன்னால் உருவாக்கப்பட்ட அந்த விளையாட்டுப் படகு எந்த ஒரு பழுதுமில்லைாமல் விற்பனைக்காக வைக்கப்பட்டிருப்பதைக் கண்டான். தன்னுடைய படகைக் கண்டவுடன் அவனது மகிழ்ச்சியைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை. கடைக்காரனிடம் ஓடிச் சென்று, அது தன்னுடைய கப்பல் என்றும் அது காணாமல் போன விதம் குறித்தும் கூறி, அதைத் தன்னிடம் திருப்பித் தருமாறு அந்த சந்தை வியாபாரியிடம் கேட்டான். அப்பொழுது அந்த வியாபாரி "தம்பி நீ சொல்லும் கதையைக் கேட்கும்பொழுது அது உண்மையிலேயே உன்னுடையது தான் என்று புரிந்து கொள்ள முடிந்தாலும், நான் அதை உனக்கு இலவசமாகத் தர முடியாது. ஏனெனில் நான் ஒருவரிடம் அதை விலைகொடுத்தே விற்பனை செய்வதற்காக வாங்கிக் கொண்டேன் என்றான். அதைக் கேட்ட மகன், தான் அதை எப்படியும் வாங்குவேன் என்று கூறி, அதற்கான விலையை அறிந்து கொண்டான். விரைவில் உரிய பணத்துடன் வருவேன் என்றும் அதனை வேறு யாரிற்கும் கொடுத்து விட வேண்டாம் என்றும் கூறிச் சென்றான்.

தனது சிறிய படகை எப்படியாவது வாங்கி விட வேண்டும் என்று விருப்பத்தோடு, அதன் விலை அதிகமாக இருந்தபடியாலே வீடு வீடாகச் சென்று தன்னால் இயன்ற மட்டும் சிறு சிறு வேலைகளைச் செய்து, சிறிது சிறிதாக பணத்தை சேகரிக்கத் தொடங்கினான். அவனுக்கு அது மிகவும் களைப்பாகவும், வேதனை யாகவும் இருந்தாலும் தான் செய்த அந்தப் படகில் இருந்த விருப்பத்தின் நிமித்தம் எந்த ஒரு வருத்தத்தையும் வேதனையையும் பொருட்படுத்தாமல், வெட்கத்தைத் துறந்து எந்த வேலையாக இருந்தாலும், ஓடி ஓடி இரவு பகலாக பணத்தை சேகரித்தான். பின்னர் மகிழ்ச்சியோடு சென்று அந்த வியாபாரியிடம் தான் உருவாக்கின தன்னுடைய சிறிய படகை அதற்கு நியமித்த விலையைக் கொடுத்து வாங்கிக் கொண்டு வந்தான். வரும் வழியிலே அந்தப் படகை தன்னுடைய மார்போடு அணைத்துக் கொண்டு, அதனைப் பார்த்து, இவ்விதமாகச் சொன்னான். "நானே உன்னை உருவாக்கினேன், இப்பொழுதும் நானே உன்னை விலைக்கொடுத்தும் வாங்கினேன்".

ஆமாம் அன்பானவர்களே! இப்படித்தான் எங்கள் ஒவ்வொருவரையும் தமது கரத்தினால் உருவாக்கிய பிதாவாகிய தேவன், நாம் பாவத்திலே அடிமைப் பட்டிருந்தபடியால் எங்களை மீட்கும்படியாக, நம் ஒவ்வொருவருக்காகவும், தனது சொந்தக்குமாரனென்றும் பாராமல் அவருடைய இரத்தத்தை சிலுவையிலே சிந்தி விலைக்கிரயமாக கொடுத்து, நம்மை மீட்டுக் கொண்டார். அவரே நம்மை உருவாக்கினார். அவரே நம்மை மீட்டும் கொண்டார்.

**"தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை**
**விசுவாசிக்கிறவன் எவனோ, அவன் கெட்டுப் போகாமல்**
**நித்திய ஜீவனை அடையம்படிக்கு அவரைத் தந்தருளி,**
**இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார்."**

- யோவான் 3 : 16 -




றொரன்ரோ அருவடை மிஷனரி சபை விளையாட்டுக் கழகத்தின்

## Family Day - 2015



**Aug. 15, 2015 - Saturday**
**10.00 a.m to 7.00 p.m.**

L'Amoreaux Park

(Birchmount & Finch - Close to Silversprings Blvd)

Welcome



# சுகவாழ்வு!

## Community Care Access Centre

## சுகாதார பராமரிப்பு அனுகுமுறை நிலையம்

சுகாதார பராமரிப்பு குறித்த விபரங்கள் அனைத்தையும் பெற்றுக்கொள்வதற்கான ஒரே இடம் சுகாதார பராமரிப்பு அணுகுமுறை நிலையமாகும். இச்சேவைகளுக்கான நிதி சுகாதார மற்றும் நீண்டகால பராமரிப்பு அமைச்சினால் வழங்கப்படுகின்றது.

சுகாதார பராமரிப்பு அணுகுமுறை நிலையத்தினால் வழங்கப்படும் சேவைகளாவன :

- Nursing - தாதியர்களின் மருத்துவ சேவை
- Physiotherapy (PT) - உடற்பயிற்சி சிகிச்சை
- Occupational Theraphy (OT) - தொழில்முறையிலான சிகிச்சை
- Social Work Services - சமூக சேவையாளர்
- Nutrition Service (Dietician) - உணவுகுறித்த விளக்கவியலாளர்
- Equipments and Medical Supplies - மருத்துவ தேவைப்பொருட்களும் கருவிகளும்
- Personal Support Worker (PSW) - தனிப்பட்ட ரீதியிலான துணை

### சுகாதார பராமரிப்பு அனுகுமுறை நிலையம் வழங்கும் சேவைகளுக்கு தகுதியுடையவர்கள் யார்?

- மாகாண அரசினால் வழங்கப்பட்ட செல்லுபடியான சுகாதார அடையாள அட்டை உடையவர்கள்.

சுகாதார பராமரிப்பு அணுகுமுறை நிலையம் வழங்கும் சேவைகளுக்கு தகுதியற்றவர் களாகக் காணப்படிள், மாற்றுவழியின் மூலம் சேவைகளைப் பெற்றுக் கொள்வதற்கான வழிமுறைகளுக்கான தகவல்களையும் உதவியையும் இந்நிலையம் வழங்கும். ஊதாரண மாக பொது சமூக சேவைகளுக்கான பரிந்துரை செய்தலைக் (Referral to Community resources and Services) குறிப்பிடலாம்.

### சுகாதார பராமரிப்பு அனுகுமுறை நிலையம் வழங்கும் சேவைகளுக்கு யார் (Referral Care) பரிந்துரை செய்யலாம்?

நீங்களோ அல்லது உங்களின் கருத்துரிமை அங்கீகாரத்துடன் (With your consent) மருத்துவர் பராமரிப்பாளர், நண்பர் அல்லது சுகாதார தொழில் வல்லுனர்கள் யாராவது பரிந்துரை செய்யலாம்.

### CCAC சேவைகளுக்கு தகுதியுடையோர் யார் ?

- அண்மையில் வைத்தியசாலையில் நடைபெற்ற சத்திரசிகிச்சை அல்லது கொடிய நோய் காரணமாக சிகிச்சை அளிக்கப்பட்ட பின்னர், வீடு திரும்பிய பின் தொடர்ந் தும் வீட்டில் சிகிச்சை தேவைப்படின் CCAC தேவையான சேவைகளை தெரிவு செய்து அச்சேவைகளை வழங்குவதற்குரிய ஒழுங்குகளை செய்யும்.
- உங்களின் வீடடில் யாராவது ஒருவர் தனிமையாக அல்லது சமாளிக்க இயலாத நிலையில் உதவிகள் தேவைப்படும் பட்சத்தில் CCAC தேவையான சேவைகளை தெரிவுசெய்து தகுதியாகும் பட்சத்தில் வழங்குகிறது.
- உங்களின் குழந்தைகளுக்கு வீட்டிலோ அல்லது பாடசாலையிலோ தொழில்பயிற்சி பெற்ற (Professionals) வல்லுனர்களின் சேவை தேவையாயிருந்தால் CCAC தேவை யான சேவைகளை வழங்கும்.
- மருத்துவம் மற்றும் புனர்வாழ்வு நிலையிலுள்ள மாணவர்கள், தமது கல்விசார் செயற்பாடுகளை தொடர்வதற்கான சந்தர்ப்பத்தை CCAC வீட்டிலோ அல்லது பாட சாலையிலோ வழங்குகிறது.
- மூளையில் பாதிப்பு அல்லது மனோவியல் சிகிச்சை பெற்றுக்கொள்ளும் ஒரு நபர் சமூகத்தில் தொடர்ந்து வாழும்பொருட்டு, வைத்தியசாலையில் அனுமதிக்கப்படாமல்) வீட்டிலேயே அவர்களுக்குரிய சேவைகளை விரும்பின் CCAC அதற்கான ஒழுங்கு களை செய்து வழங்குகின்றது.
- தகுந்த தொழிற்பயிற்சி வல்லுனர்களை சிபார்சு செய்து அவர்களுக்குரிய சேவை-களை வழங்குகின்றது.
- ஒரு நபர் தனது சுகவீனம் காரணமாக குணமடையாமல் இருக்கும் நிலையில் தொடர்ந்து தனது வீட்டிலேயே சிகிச்சை பெறும் நிலையில் CCAC அதற்குத் தேவையான சேவைகளை வழங்குகின்றது.
- வீட்டில் சுயமாக வாழ்வது சாத்தியமற்றுப் போகும் நிலையில் நீண்ட கால பரா மரிப்பு இல்லங்கள் குறித்த தகவல்களை பரிமாறி பரிந்துரை செய்து அவர்களுத் தேவையான உதவிகளை CCAC செய்து வருகின்றது.

**மேலதிக விபரங்களுக்கு நீங்கள் கீழ்க்காணும் இணையத்தள முகவரியை அனுகலாம்.**

**www.ccac.ont.ca**

# முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!

**"அப்பொழுது எல்லா ஜாதிகளும் உங்களைப் பாக்கியவான்கள் என்பார்கள்"**

**- மல்கியா 3 : 12 -**




































## கர்த்தர் செய்யச் சொன்ன இக்காரியங்கள் கடந்த 4 வருடங்களிற்குள் 25 மாவட்டங்களுக்குள்ளும் நிறைவேற்றப்பட்டுள்ளது.

2011ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இலங்கை தேசத்தின் மத்திய மாகாணத்திலுள்ள ஹற்றன் மாநகரில் ரொறன்ரோ அறுவடை மி'னறி சபையால் "ஆசீர்வாத ஜெப முகாம்" நடத்தப்பட்டது. அந்தக் கூட்டத்தில் போதகர்களாக ஒன்றுகூடி ஜெபித்தபோது, இன்னும் இரண்டு வருடங்களில் இலங்கையில் இருக்கும் 25 மாவட்டங்களையும் சந்திக்குமாறு கர்த்தர் தரிசனத்தைத் தந்தார். 2011ம் ஆண்டில் கர்த்தர் கட்டளையிட்டபடியே கடந்த 3 வருடங்களாக 24 மாவட்டங்களுக்குள்ளும் கடந்து சென்றோம். கர்த்தருடைய வழிநடத்துதலின்படியே சுவிசேஷக் கூட்டங்களை நடத்தி புதிய ஆத்துமாக்களை இரட்சிப்புக்குள் நடத்தவும், விசுவாசிகளின் ஆவிக்குரிய வாழ்க்கையை பெலப்படுத்தி தேசத்திற்காக திறப்பின் வாசலில் நின்று ஜெபிக்கச் செய்யவும், வாலிபர் கூட்டங்களை நடத்தி, வாலிபர்களை கர்த்தரின் சேனைகளாக, தேசத்தின் எதிர்கால தலைவர்களாக உருவாக்கவும், போதகர்களுக்கான கூட்டங்களை நடத்தி, சபைகளை ஸ்திரப்படுத்துவதற்குரிய ஆலோசனைகளை வழங்கி, சபைகளை ஸ்திரப்படுத்தவும், சபை வளர்ச்சிக்காக தோள் கொடுக்கவும், தேவ இராஜ்யத்துக்காக உற்சாகமாக நின்று செயல்படக்கூடியவிதத்தில் ஊழியர்களை பெலப்படுத்தி, பயிற்றுவிக்கவும் கர்த்தர் கிருபை செய்தார்.





மட்டுமல்லாமல் ஜெப யாத்திரைகளுக்கூடாக போதகர்களாக ஒன்று சேர்ந்து பட்டணங்களுக்குள் ஊடுருவிச் சென்று, இருளின் ஆதிக்கத்திற்குள் இருக்கும் அந்தகார வல்லமைகளை, பட்டணங்களில் சத்தியத்துக்கு தடையாக இருக்கும் கட்டுக்களை, ஆசீர்வாதங்களைத் தடை செய்யும் பலவான்களின் அரண்களை, தடைகளை ஜெபத்தினூடாக அகற்றி, கர்த்தர் தந்த தரிசனத்தை நிறைவேற்றினோம்.







# முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!

மொத்தத்தில் கர்த்தர் தந்த தரிசனத்தை 24 மாவட்டங்களில் 6 கட்டங்களாக நடத்தி, 25வது மாவட்டத்தை 7வது இறுதிக் கட்டமாக இலங்கை தேசத்திலுள்ள அனைத்துப் பகுதிகளிலும் உள்ள போதர்களை ஒன்றுகூட்டி கொழும்பில் ஆசீர்வாத ஜெப ஒன்றுகூடலாக, ஒக்ரோபர் 1ம் திகதியன்று நிறைவேற்றி முடிக்க கர்த்தர் கிருபை செய்தார்.

இதன்படி நாம் பார்க்கும்பொழுது கர்த்தர் கொடுத்த தரிசனம் மிக விரைவில் நிறைவேறும். இலங்கை தேசத்திலுள்ள 25 மாவட்டங்களும் இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியினாலே நிரப்பப்பட்டு, இயேசுவின் இரத்தத்தினாலே கழுவப்படும். எதிரியான பிசாசின் திட்டங்கள் உடைக்கப்படும். இந்த தரிசனத்தின் ஊடாக இலங்கை தேசமானது சோதோம், கொமோரா போன்ற பட்டணங்களுக்கு ஏற்பட்ட பேரழிவைச் சந்திக்காமல் கர்த்தர் வாக்குத்தத்தத்தம் பண்ணினபடியே இலங்கை தேசம் ஆசீர்வதிக்கப்பட்டு, முழு உலகத்திற்கும் ஓர் ஆசீர்வாதமான தேசமாக நிச்சயமாக மாறும்.



கர்த்தர் எமக்குத் தந்த தரிசனத்தை நிறைவேற்றுவதின் இறுதிக் கட்டமாக 25 மாவட்டத்தின் போதகர்களையும், வெளிநாடுகளில் இருக்கும் போதகர்களையும், இலங்கை தேசத்தின் அரசியல் தலைவர்களையும் ஒன்று கூட்டுவதிலும், ஒழுங்குகளைச் செய்வதிலும் நாங்கள் மிகவும் தீவிரமாக செயல்பட்டோம்.

2014ம் ஆண்டு ஜனவரி மாதம் 24 மாவட்டங்களின் போதக ஐக்கியங்களையும் தலைவர்களையும் சந்தித்து கர்த்தருடைய தரிசனத்தின் இறுதிக்கட்டமான ஆசீர்வாத ஜெப ஒன்று கூடுகை குறித்தும், கர்த்தருடைய வழிநடத்தல் குறித்தும் அதிலே பங்குபற்ற வேண்டியதின் அவசியத்தைக் குறித்தும் பகிர்ந்து கொண்டோம். இக்கூட்டங்களிலே கலந்து கொண்ட அனைத்து தலைவர்களும் “இது கர்த்தரால் ஆகிற்று” என்று கூறி தீர்க்கதரிசனங்களுக்கூடாக கூறி, எங்களை உற்சாகப்படுத்தியதுடன், ஒத்துழைப்பையும் ஆதரவையும் நல்கினார்கள்.

## 7வது கட்டம் – 25வது மாவட்டமாகிய கொழும்பு



2014ம் ஆண்டு ஒக்ரோபர் மாதம் 1ம் திகதி, இலங்கை தேசத்தில் உள்ள 25 மாவட்டங்களிலும் இருந்து சகல தலைமை ஊழியர்கள், அவர்களுடைய மனைவிமார், உதவி ஊழியர்கள், அவர்களுடைய மனைவிமார், சகல பெந்தகோஸ்தே சபை ஊழியர்கள். பூரண சுவிஷேச சபை ஊழியர்கள், மெதடிஸ்ட் சபை ஊழியர்கள், பப்டிஸ்ட் சபை ஊழியர்கள், கத்தோலிக்க சபைத் தலைவர்கள். அங்கிலிக்கன் சபைத் தலைவர்கள், இரட்சண்ய சேனை தலைவர்கள், அத்தோடு கடந்த காலங்களிலே பலநாடுகளிலும் இருந்து இலங்கை தேசத்துக்கு கடந்து வந்து தேசத்தின் சமாதானத்துக்காக ஜெபித்து ஊழியம் செய்த ஊழியர்கள் அனைவருமாக கர்த்தர் தந்த தரிசனத்தை நிறைவேற்றும்படி ஆயத்தமாகி கொழும்பில் உள்ள சுகததாச உள்ளரங்கில் ஒன்றுகூடி வந்தார்கள். தேவன் சொன்னபடியே எல்லாவற்றையும் நாம் செய்து முடித்தோம். 25 மாவட்டங்களிலும் இருந்து வந்ததாகிய 80 வீதமான போதகர்களும், சகல தலைவர்களும், தேவன் அவர்களுக்குச் சொன்னபடியே, தங்கள் தங்கள் மாவட்டங்களுக்குரியதாகிய ஜெப விண்ணப்பங்களை அறிக்கையிட்டு ஜெபம் பண்ணினார்கள். இவ்வாறாக தேசத்தின் ஒவ்வொரு மாவட்டங்களிலுள்ள தேவைகளுக்காகவும் ஆசீர்வாதத்திற் காகவும் ஜெபம் ஏறெடுக்கப்பட்டது.

## “ஆசீர்வாத ஜெப ஒன்றுகூடல்” - ஒக்ரோபர் 01, 2014

25 மாவட்டங்களிலிருந்தும் பஸ்வண்டிகளில் வந்திறங்கும் ஜெப வீரர்கள்!

# முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!

## 2014, ஒக்ரோபர் 1ம் திகதி ஜெபகூடுகையின் பின்பு தேவனின் செயல்

இந்த ஜெபக்கூட்டத்திற்கு பின்பாக ஒரு மாதம் கழித்து முக்கிய தலைவர்களை சந்தித்து, அவர்களுடைய ஒத்துழைப்புக்கு நன்றி செலுத்துமுகமாக இலங்கை தேசத்துக்கு கடந்து சென்றிருந்தோம். பிரயாணத்தின் மத்தியில் ஒவ்வொரு மாவட்டங்களுக்கூடாக கடந்து சென்ற போதும், கேள்விப்பட்ட காரியங்கள், கண்களால் கண்ட காரியங்கள் அனைத்தும் ஜெபத்திற்கான பதில்களாக மாற்றப்பட்டிருப்பதைக் காணக்கூடியதாக இருந்தது

இயற்கையின் சூழ்நிலைக்கூடாக ஜெபத்திற்கான பதில்கள், அரசியல் தலைவர்களுக்கூடாக ஜெபத்திற்கான பதில்கள், தொழில்துறைகளுக்கூடான ஜெபத்திற்கான பதில்கள், பொருளாதார ரீதியாக ஜெபத்திற்கான பதில்களை ஜனங்கள் பெற்றிருக்கின்றார்கள். ஆசீர்வதிக்கும் கரங்கள் மிஷன் பணிக்கூடாக தேசத்தில் செய்யப்பட்ட ஜெப ஒன்று கூடலினுடாக, இலங்கை தேசம் ஆசீர்வாதத்தினால் மாற்றப்பட்டு வருகின்றது.

## தேவன் பதில் கொடுக்கத் தொடங்கி விட்டார்!

25 மாவட்டத் தலைவர்களும் ஜெபிக்கும்பொழுது, குறிப்பாக அவ்வவ் மாவட்டங்களுக்கு ஏற்றபடி எந்த நன்மைகளை தேவனிடத்திலே ஆசீர்வதித்து விண்ணப்பம் பண்ணினார்களோ, அதன்படியே தேவன் பதில் கொடுக்கத் தொடங்கி விட்டார்.

உதாரணமாக பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்கள் தண்ணீரில்லாமல் வரண்டு போயும், யுத்த சூழ்நிலைகளினாலே கைவிடப்பட்டும் பிரயோஜனமற்று காணப்பட்ட இடங்கள், கடந்த ஒரு மாத காலத்திற்குள்ளே மழையை சீராய் பெற்றது. அரசாங்க அனுமதிகள், ஒத்தாசைகள் விவசாயிகளுக்கு வழங்கப்பட்டது. எல்லா வயல்நிலங்களும் பசுமையாய் காணப்படுகிறது. அத்தோடு போக்குவரத்துக்காக ஜெபித்தார்கள். சரித்திரத்திலே காணப்படாத அளவுக்கு அரச உத்தியோகஸ்தர்களுக்கு அரசாங்கத்தினால் மோட்டார் சைக்கிள்கள் சலுகை அடிப்படையில் கொடுக்கப்பட்டிருக்கின்றது. நூற்றுக்கணக்கான புதிய பஸ் வண்டிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றது. 30 வருடங்களாக யுத்த சூழ்நிலைகளினால் நிறுத்தப் பட்டிருந்ததாகிய ரயில் போக்குவரத்து பாவனைக்கு வந்துள்ளது. மின்சார விநியோகம் செய்யப்பட்டுள்ளது. இராணுவத்தினரால் கைப்பற்றப்பட்டிருந்த காணிகள் திரும்பவும் உரிமையாளர்களுக்கு கையளிக்கப்பட்டிருக்கின்றது.



புதிய ரயில் சேவை
Colombo Yarl Express



அரசாங்க உத்தியோகத்தர்களுக்கு கையளிப்பதற்கு தயார் நிலையில் வைக்கப்பட்டிருக்கும் மோட்டார் சைக்கிள்கள்



அக்கரைப்பற்றில் பிடிக்கப்பட்ட மீன் நவம்பர் 9, 2014ம் திகதியன்று இலங்கையில்




புனரமைக்கப்பட்ட புதிய யாழ் புகையிரத நிலையம்'

யுத்த சூழ்நிலைகளினால் இழந்த சொத்துக்கள் மறுபடியும் ஜனங்களுக்கு கொடுக்கப்படுகின்றது. அத்துடன் கடல் வலயங்களில் கடலோர பகுதியிலே சரித்திரத்தில் காணப்படாத அளவுக்கு ஒவ்வொரு வலையிலும் 15,000 – 20,000 கிலோ எடையில் விலையுயர்ந்த மீன்கள் அகப்பட்டுள்ளன. புது பாடசாலைகள், புதிய தொழிற்சாலைகள், புதிய உல்லாச பிரயாணிகள் தங்குகிறதான ஹோட்டல்கள் ஸ்தாபிக்கப்படுகின்றன. இதினாலே அதனைச் சுற்றியுள்ள கிராமங்கள், பட்டணங்கள் முன்னேற்றம் அடைகின்றன. தவறான சட்டங்கள் நேர்த்தியாய் மாற்றப்படுகின்றன. தலைவர்களுக்குள் மாற்றம் வந்திருக்கின்றது. தலைமைத்துவங்கள் மாறியிருக்கின்றன. இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்.

## நேற்றும் இன்றும் என்றும் மாறாத இயேசு!

சீரியராலே சமாரியா முற்றுகையிடப்பட்டிருக்கும் பொழுது நாளைக்கு காலையிலே சூழ்நிலைகளை மாற்றுவேன் என்று கூறி, சமாரியர்களுக்கு தமது வல்லமையை வெளிப்படுத்திய தேவன், அவர் நேற்றும், இன்றும், என்றும் மாறாதவராய் இருந்து, "வரப்போகின்ற 30 ஆண்டுகளுக்குள்ளே, இலங்கை தேசத்துக்கு மட்டுமல்லாமல் முழு உலகத்துககும் ஆசீர்வாதமாக மாற்றுவேன்" என்று இலங்கை தேசத்தை ஆசீர்வாதமாக மாற்றத் தொடங்கி விட்டார்.

## கர்த்தர் கிரியை செய்கிறார்!

2014ம் ஆண்டு ஒக்ரோபர் மாதம் 01ம் திகதி நடைபெற்ற ஜெப ஒன்று கூடலுக் குப் பின்பு, அற்புதமான மாற்றங்கள் தேசத்தில் நடந்து கொண்டிருக்கின்றன.



ஒக்ரோபர் 1ம் திகதி சுகததாச உள்ளரங்கில் நடைபெற்ற ஜெப ஒன்றுகூடலில், விசேஷமாக ஒரு வெற்றியுள்ள ஒரு நல்ல ஜெபத்தை செய்து முடித் திருக்கிறோம். எங்கள் முழு எதிர்ப்பார்ப்பும் இலக்கும் அங்கு ஜெபித்த ஜெபத்தை ஆசீர்வாதமாக தேசத்திலே காண வேண்டும் என்பதி லேயே இருக்கின்றது.

**போதகர் ஐக்கியத் தலைவர்,**
**களுத்தறை மாவட்டம்**

---



**பாஸ். ஜெயக்கொடி, போதகர் ஐக்கியம், மாத்தறை மாவட்டம்**

ஒக்ரோபர் மாதம் 1ம் திகதி நடைபெற்ற ஜெப ஒன்றுகூட லின் எங்களுக்கு கொடுக்கப்பட்ட ஜெபக் குறிப்புகளில் ஒற்றுமையைக் குறித்து ஜெபம் பண்ண ஒழுங்கமைக்கப் பட்டிருந்தது. அந்த ஜெப ஒன்றுகூடலுக்குப் பிறகு, மாத் தறை மாவட்டத்திலே உள்ள எல்லா சபைகளும், ஒன்றி ணைந்து செயல்படக்கூடிய அநேக சாத்தியங்கள் ஏற்பட் டிருக்கின்றது. மாத்தறை மாவட்டத்திலுள்ள போதகர்கள் அனைவரையும் ஒன்றுகூட்டுவது ஒரு கடினமான காரிய மாக இருந்தது. ஆனால் இந்த ஜெப ஒன்றுகூடலின் பின் அனைத்து போதகர்களும் மிக கரிசனையுடன் உணர் வடைந்தவர்களாக கடந்து வருகின்றார்கள்.

---



**பாஸ்டர் ஜோதிமணி, தலைவர்,**
**போதகர் ஐக்கியம், காலி மாவட்டம்**

இது தேவனிடமிருந்து வந்த காரியம் என்பதை உணர்ந்து, நாங்கள் முழு இருதயத்தோடு அவர்கூறிய தரிசனத்தை ஏற்றுக்கொண்டோம். எனவே 2014ம் ஆண்டு இலங்கை தேசத்தில் ஒரு எழுப்புதலின் அசைவு ஆரம்பித்த ஆண்டாக உணரமுடிகின்றது.



ஒக்ரோபர் 1ம் திகதி சுகததாச உள்ளரங்கில் நடைபெற்ற ஜெப ஒன்று கூடலில், விசேஷமாக ஒரு வெற்றியுள்ள ஒரு நல்ல ஜெபத்தை செய்து முடித்திருக்கிறோம். எங்கள் முழு எதிர்ப்பார்ப்பும் இலக்கும் அங்கு ஜெபித்த ஜெபத்தை ஆசீர்வாதமாக தேசத்திலே காணவேண்டும் என்பதிலேயே இருக்கின்றது.

**பாஸ்டர் அன்ரனி சைமன், தலைவர்,**
**போதகர் ஐக்கியம், கொழும்பு தெற்கு மாவட்டம்**

---



**பாஸ்டர் செவோன் சாமுவேல்**
**ரிறோன் ஜெப ஆலயம் – கம்பஹா**

இந்த ஒக்ரோபர் 1ம் திகதி கூட்டத்திற்குப் பிறகு, இலங்கை தேசம் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறது. வறட்சியான பிரதேசங்களில் மழை வந்தது. யாழ்ப்பாணத்திற்கு ரயில்சேவை மீண்டும் ஆரம்பிக்கப்பட்டு விட்டது. அதேபோல, பலவித மான ஆசீர்வாதங்களை நாம் ஒவ்வொரு மாவட்டத்திலும் காண்கிறோம்.

---



**பாஸ்டர் ஜெப்தா, தலைவர், போதகர் ஐக்கியம் திருகோணமலை மாவட்டம்**

ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற ஐக்கிய ஜெபத்திற்கு பிறகு எம் மாவட்டத்தில் அநேக காரியங்களை நாங்கள் காணக்கூடிய தாக இருக்கின்றது. விசேடமாக பல வருடங்களாக மூடப்பட்டுக் கிடந்த சீனி தொழிற்சாலை, இயங்குவதற்கு எங்களுடைய ஜனாதிபதி பல கோடி ரூபாக்களை, ஒதுக்கியிருக்கிறார். யுத்தத் தின் நிமித்தம் நீண்ட காலமாக இந்த தொழிற்சாலை இயங்காமல் கிடந்தது. இது வரலாற்றில் இல்லாத ஒரு காரியம். மட்டக்களப்பு பகுதிகளிலே மீன்பிடி அதிகமாக காணப்படு கின்றது. ஜனாதி பதி இம்முறை பல விவசாயத் திட்டங்களுக்கு உதவி செய்வதற்கு அதிக பணத்தை ஒதுக்கியிருக்கிறார். அதேபோல் மீன்பிடித் திட்டங் களை அபிவிருத்தி செய்யும்படியாக பல கோடி ரூபாக்களை ஒதுக்கியிருக்கிறார். இவை யாவும், இந்த ஜெப ஒன்று கூடலுக்கு பிறகு நடக்கும் காரியங்கள் என்பது குறிப்பிடத்தக்கது. தேவன் தேசத்தை ஆசீர்வதிக்கிறார்.

# முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!



இந்தக்கூட்டத்தின் நிமித்தமாக எல்லா சபைகளும் அதாவது தனிப்பட்ட ஊழியங்களையும், Main Line சபைகளையும் ஒன்று சேர்க்கப்பட்டார்கள். அந்த தரிசனத்தை, அந்தப் பணியை நாங்கள் அந்த நாட்களில் முழு இலங்கைக்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம் என்ற பெயரில் சுகததாச உள்ளரங்கில் 2014, ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற ஜெப ஒன்றுகூடுகையில் காணக்கூடியதாக இருந்தது.

---

**முல்லைத்தீவு**



ஒக்ரோபர் 1ம் திகதி அந்த ஜெப ஒன்றுகூடுகை மிகவும் ஆசீர்வாதமாக இருந்தது. கிராமப்புறங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. கிராமப்புறங்களிலுள்ள ஜனங்கள் மின்சாரமில்லாமல் சஞ்சலப்பட்டவண்ணம் இருந்தார்கள். ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற கூட்டத்துக்குப் போய் வந்ததன்பின்னர், நிறைய இடங்களிலே மின்சார விநியோகம் செய்யத்தக்கதாக கர்த்தர் ஆசீர்வதித்திருக்கின்றார்.

---



**பாஸ்டர், கிளிநொச்சி**

கடந்த ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற ஜெப ஒன்றுகூடலுக்கு நாங்களும்கூட கொழும்புக்கு கடந்து சென்றிருந்தோம். விசேஷமாக மழைக்காக நாங்கள் ஜெபித்திருந்தோம். கிளிநொச்சிப் பகுதியில் மழை இல்லாததன் நிமித்தமாக வயல் நிலங்கள் பயிர்ச்செய்கை இன்றி விவசாயிகளும் பெரும் சிரமத்தை எதிர்நோக்கினார்கள். அந்த அளவுக்கு மிகவும் வறட்சி காணப்பட்டது. கர்த்தர் ஜெபித்தது போலவே ஒரு வாரத்திற்குள் மழையைப் பெய்யப்பண்ணினார். அதன்பின்னர் விவசாயிகளின் முகங்களில் செந்தளிப்பை பார்க்கக்கூடியதாக இருந்தது. நீண்ட காலமாக காணிப்பத்திரம் வழங்கப்படாமல் பல காலங்கள் சிரமத்தோடு வாழ்ந்த கிட்டத்தட்ட 25,000 பேருக்கு காணிப்பத்திரத்தை வழங்கினார். எல்லாவற்றுக்குமாக கர்த்தருக்கு நன்றி செலுத்துகின்றேன்.

---



இப்படிப்பட்ட பெருந்திரளான தேவ ஜனங்களாக ஒரு கூட்டத்தைக் கூட்டி, அந்நிய மக்களுக்கு ஒரு எடுத்துக்காட்டாக எல்லாவற்றையும் நேர்த்தியாகவும், அழகாகவும், ஒழுங்கமைத்து, இலங்கையிலுள்ள முழுச்சபைகளையும் ஒருங்கிணைத்து ஓரிடத்தில் கூட்டியது ஒரு பெரிய காரியமாகவே காணப்படுகின்றது.

**பாஸ்டர்,**
**கேகாலை மாவட்டம்**

---



உண்மையாகவே கடந்த ஒக்ரோபர் 1ம் திகதி நடந்த ஜெபம் இது சரித்திரத்தில் இடம்பெற்ற ஒரு பெரிய ஆசீர்வாதம். அதற்கு பிற்பாடு எங்களுடைய மாவட்டத்தில் பெரிதான ஆசீர்வாதங்கள் அதாவது புதிய திருச்சபைகள் கட்டப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அநேக ஊழியர்கள் ஆசீர்வதிக்கப்பட்டுக் கொண்டு வருகின்றார்கள்.

**பாஸ்டர் கிறிஸ்ரோபர்**
**போதகர் ஐக்கியம், அம்பாறை மாவட்டம்**

---



**பாஸ்டர்**
**இரத்தினபுரி**

இலங்கையிலுள்ள சபைகள் மத்தியில் பலவிதமான பிரிவினைகள் காணப்பட்டன. அது தேவனுடைய இராஜ்யம் கட்டப்படுவதற்கு மிகவும் பாதகமான ஒரு காரணியாக காணப்பட்டு வந்தது. எனினும் தேவனுடைய கிருபையால் அருமையான தேவ ஊழியர் பாஸ்டர் வின்சன்ட் அவர்களுக்கூடாக தேவன் கொடுத்த தரிசனத்தின் நிமித்தமாக, இலங்கை தேசத்தின் 25 மாவட்டத்திலும் உள்ள சபைகளை, ஊழியர்களை இணைக்க கர்த்தர் கிருபை

---



**பாஸ்டர் ராஜன்**
**போதகர் ஐக்கியம்,**
**வவுனியா**

இந்த கொழும்பில் நடந்த ஊழியர் ஜெப ஒன்றுகூடலின் பின்னரே, குறிப்பிடப்பட்ட 3 மாவட்டங்களிலுமுள்ள விவசாயிகள் ஆசீர்வதிக்கப்படகூடியதான ஒரு திட்டம் அந்த கடலுக்குப் போகிறதாகிய நீர் எல்லாவற்றையும் ஒன்றாய் சேர்த்து, பெரிதாக ஓர் அணைக்கட்டை கட்டி ஒன்று சேர்க்கிறதாகிய ஒரு திட்டம், 3 மாவட்டத்துக்கும் 3 போகங்கள், அதாவது 3 தடவைகள் இந்த வயல் நிலங்களை செய்வதற்குரிய பெரிய ஒரு ஆசீர்வாதம், இப்போது திறக்கப்பட்டிருக்கின்றது என்பதை, நம்பக்கூடியதாக இருக்கின்றது.

---

**முல்லைத்தீவு**



நாங்கள் வாழ்கின்ற கிராமம் மிகவும் பின்தங்கிய, யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட ஒரு காட்டுப் பிரதேசமாக இருக்கின்றது. அதற்கு மின்சார வசதிகள் எந்த காரணத்தைக் கொண்டும் தரமாட்டோம் என்று சொல்லி விட்டார்கள். ஆனால் கூட்டத்துக்கு சென்று வந்த பின்னர் நேற்றைய நாளிலே மின்சாரத்தை வழங்குவதற்கான Trans former ஐ பூட்டியிருக்கின்றார்கள். எல்லாருக்கும் Electricity வரத்தக்கதாகவும், பாதைகளை விரிவாக்கித் தந்தபடியாலும் கர்த்தருக்கு நன்றி செலுத்துகின்றேன்.

---

**பாஸ்டர், முல்லைத்தீவு**



முல்லைத்தீவு கடல், நதி, ஆறுகள் எல்லாம் வறண்டு போயிருந்தது. மீனவக் குடும்பங்கள் மிகவும் கஸ்டப்படுக கொண்டிருந்தார்கள். இந்தக் கூட்டத்திற்கு பிறகு மழையின் காரணமாக நன்றாக தண்ணீர் நிறைந்து மீனவர்கள் குறைவின்றி நிறைய மீன் பிடிக்கத்தக்கதாக (இன்று காலையிலும்கூட) அதைப் பார்த்தேன். இந்த ஆசீர்வாதமான இலங்கை தேசம் ஜெப ஒன்று கூடலின் பின்பாக முல்லைத்தீவு மாவட்டத்தை இவ்விதமாக ஆசீர்வதித்து வருகின்றார். அதற்காக கர்த்தரை நன்றியோடு துதிக்கின்றேன்.

---



இந்த 1ம் திகதி ஜெப ஒன்றுகூடலுக்கு பிறகு, அதாவது மணவாட்டியானவள், இந்த தேசத்திலே எழும்பி நிற்கிறதினாலே, சபைகள் எல்லாவற்றையும் தேவன் ஒருமனப்படுத்தி ஆசீர்வதிக்கப் போகின்றார். சபைகளைத் தேடி மக்கள் அலைஅலையாய் கடந்து வருகின்ற காலங்களுக்குள்ளே நாங்கள் கடந்து வந்து விட்டோம்.

**சகோ. பெனடிக்ட்**
**யாழ்ப்பாணம் ஜெப ஒருங்கிணைப்பாளர்**

---

**பாஸ்டர் மகிந்த, போதகர் ஐக்கியம்,**
**அநுராதபுரம் மாவட்டம்**



அந்த ஸ்டேடியம் தேவ ஜனங்களால் நிரம்பியிருந்த வேளையில், எனக்கு ஒரு சத்தம் கேட்டது. பிதாவிடத்திலிருந்து இன்று - “இலங்கைக்கு போங்கள் “ என்று என்று தேவதூதர்களுக்கு கட்டளையிடும் அந்த சத்தம் கேட்டது. இலங்கையிலே என்னுடைய சரீரம் ஒன்று கூடியிருக்கின்றது என்று அந்த சத்தம் கேட்கும் பொழுது, அந்த இடத்திலே தேவதூதர்களுடைய பிரசன்னம் காணப்பட்டதை நான் உணரக்கூடியதாக இருந்தது. இதுவரையில் தூஷிக்கப்பட்ட இலங்கை தேசமானது, துக்கத்தால் நிறைந்திருந் திருந்த இலங்கை தேசமானது, தேவ சமூகத்தால் அபிஷேகிக்கப்பட்டு, பரிசுத்தமாக்கப்பட்டதை உணர முடிந்தது.

---



**பாஸ்டர் நிமல்**
**போதகர் ஐக்கியம்**
**மன்னார் மாவட்டம்**

எங்கள் மாவட்டம் யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட ஒரு மாவட்டம். அநேக ஆண்டுகளாக அரசாங்கத்தினால் கூட இம்மாவட்டம் கவனத்திற்கெடுத்துக்கொள்ளப்படாத ஒரு மாவட்டமாகவே காணப்பட்டது. ஆனால் சமீப காலத்தில் அதாவது இந்த ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற ஜெபத்துக்கு பிற்பாடு, மன்னார் மாவட்டத்திற்குத் தேவையான, பஸ் போக்குவரத்து ஒழுங்குகள் செய்யப்பட்டிருக்கின்றது. மாத்திரமல்ல அரசாங்க உத்தி யோகத்தர்களுக்கு, விசேஷமாக கிராமப்புறங்களில் சேவையாற்றச் செல்பவர்களுக்கு, மோட்டார் சைக்கிள்கள் வழங்கப்பட்டிருக்கின்றது. அத்துடன் ஒரு குறுகிய சம்பளத்துடன் வேலை செய்த உத்தியோகத்தர்களுக்கு, அரசாங்கம், சம்பள உயர்வைக் கொடுத்திருக்கின்றது. அது மாத்திரமல்ல, இந்த மன்னார் மாவட்டத்தில் ஒரு தேசிய விளையாட்டு மைதானத்தை அமைப்பதற்கான ஒழுங்குகளும் செய்யப்பட்டிருக்கின்றது. அத்துடன் உல்லாசப் பயணிகள், தலைவர்கள் வந்து தங்கிச் செல்லக்கூடிய ஒரு ஹோட்டல் ஒன்று கட்டப்பட்டிருக் கின்றது. இன்னும் ஒரு காரியம் இந்த மன்னார் மாவட்டத்தில் அதிகமான வாலிபர்கள் இருக்கின்றார்கள். அவர்களுக்கு வேலை வாய்ப்பு குறைவாகவே காணப்பட்டது. இப்பொழுது ஒரு ஆடைத் தொழிற்சாலையும் மன்னார் மாவட்டத்தில் உருவாக்கப்பட்டிருக்கின்றது. கிட்டத்தட்ட ஆயிரத்துக்கு மேற்பட்ட வாலிபர்களுக்கு அதிலே வேலை வாய்ப்பு கிடைத்திருக்கின்றது. இந்த வேலை வாய்ப்பு வாலிபர்களுக்கு ஒரு மிகவும் பயனுள்ள காரியமாக இருப்பதை யிட்டு நாம் மனமகிழ்ச்சியடைகின்றோம். இன்னும் ஒரு தொழில்நுட்ப கல்லூரி ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றது. இந்த ஜெபத்தின் பிறகு, தேவனால் உண்டான காரியமாகவே இப்படியான மாற்றங்கள் நடைபெறுவதாக நாங்கள் விசுவாசிக்கின்றோம். ஏனென்றால் இப்படியான ஒரு நன்மையும் ஆசீர்வாதமும் இது மனுஷனால் உண்டான காரியம் அல்ல. தேவனால் உண்டான காரியம்.

---



**பாஸ்டர்,**
**முல்லைத்தீவு**

கடந்த ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற ஜெப மகாநாட்டுக்குப் பின்பதாக, அநேக ஆசீர்வாதமான காரியங்களை நாங்கள் பார்க்கக்கூடியதாக இருக்கின்றது. இப்பொழுது 37 வருடங்களுக்கு பின்பதாக எங்களுடைய கிராமத்துக்கு மின்சாரக் .கிடைத்திருக்கின்றது.

# முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!



பாஸ்டர்,
முல்லைத்தீவு

ஒக்ரோபர் 1ம் திகதி நடைபெற்ற ஜெப ஒன்று கூடுகையில், கொடுக்கப்பட்ட ஜெப விண்ணப்பங்களிலும் விவசாயத்துக்காக நாங்கள் ஜெபித்தோம். யுத்த காலத்திலும் எந்தவித புனர்மைப்புகளோ, அபிவிருத்திகளோ இல்லாத சூழ்நிலை காணப்பட்டது. இந்த ஜெபத்திற்கு பின்னர் ஆண்டவர், மாத இறுதியிலே விவசாயத் திணைக்களத்திலிருந்தும், கல்வித்திணைக்களத்திலும் இருந்து வந்து வாய்க்கால்களையும் வயல்வெளிகளையும் புனரமைத்து செய்யும்படியாகவும், அநேக விவசாயிகள் அந்த இடத்திலே விவசாயம் செய்யத்தக்கதாகவும் காரியங்களை மாற்றி அமைத்திருக்கிறார்.



**யாழ்ப்பாணம் இயேசு ஜீவிக்கிறார் சபை வடமராட்சி**

எங்கள் சபை சார்பாகவும், வடமராட்சி சபைகள் சார்பாகவும், போதகர்கள் சார்பாகவும், நாங்கள் ஏறத்தாழ 400 பேருக்கு மேலாக அங்கு கடந்து சென்று, நாங்கள் திரும்பி வந்து எங்களுடைய கிராமத்தில் இறங்கினபோது, எங்கள் கண்கள் ஆச்சரியப்படத்தக்கதாகவும், எங்கள் இருதயம் அதிசயப்பட்டு பூரிக்கத்தக்கதாகவும், நான் வந்து 3வது நாள், வடமாராட்சிப் பகுதியிலுள்ள நெல்லியடி சென்ரல் ஸ்கூல், சர்வதேச கல்லூரியாக அரசாங்கத்தால் மாற்றப்பட்டிருந்தது. ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷ அவர்கள் நேரடியாக வந்து கல்லூரியை ஆசீர்வதித்தது விபரிக்க முடியாத அதிசயம். இருதயம் அதிசயப்பட்டு பூரிக்கிறது.

---



ஒக்ரோபர் மாதம் 1ம் திகதி கொழும்பில் நடைபெற்ற ஜெப ஒன்றுகூடலில் கலந்து கொண்டு, நாங்கள் மீண்டுமாக யாழ்ப்பாணம் திரும்பியபோது, என்னுடைய ஆலயத்தைச் சுற்றிலும் ஏறத்தாழ 4000 மோட்டார் சைக்கிள்கள், யாழ் மாவட்டத்திலிருக்கிற அரச கடமை புரிகிறவர்களுக்கு சலுகை அடிப்படையில் கொடுக்கப்பட்டது. அதுமட்டுமல்ல அதிக காலமாக ஓடாதிருந்த ரயில், யாழ்ப்பாணத்திற்கு வந்து சேரவும், மக்கள் பிரயாணப்படவும் ஆண்டவர் அற்புதம் செய்திருக்கிறார். இன்னும் பெரிய காரியங்களை ஜெபத்தின் பின்னதாக ஆண்டவர் செய்து கொண்டிருக்கின்றார். அதை நாங்கள் கண்களால் பார்க்கிறோம், காதுகளால் கேட்கிறோம். கர்த்தருக்கு மகிமை உண்டாவதாக.

**பாஸ்டர் வீரகத்தி கனகராஜா**
**போதகர் ஐக்கியத் தலைவர்**
**யாழ் மாவட்டம்.**

---




## இலங்கை ஊழியங்கள்

சுனாமி, வெள்ளம் போன்ற இயற்கை அனர்த்தத்தினாலும், யுத்த காலங்களிலும் எம் ஜனங்கள் துவண்டு போன பொழுதும், ஆசீர்வதிக்கும் கரங்கள் மிஷன் பணிக்கூடாக அவர்களுக்கு உதவியளிக்க காலத்திற்கு காலம் எமக்கு தேவன் கிருபை செய்தார்.



## இந்திய ஊழியங்கள்

இந்திய தேசத்திலிருக்கும் இலங்கை அகதிகளுக்கு குழாய் கிணறுகள் அமைத்துக் கொடுக்கவும், ஓசன்னா ஊழியங்களுடன் இணைந்து எம்மக்கள் தேவனை ஆராதிப்பதற்கு அவர்களுக்கு நல்ல ஒரு கட்டிடத்தை அமைத்துக் கொடுக்கவும் கர்த்தர் எங்களுக்குப் பெலன் தந்தார்.



எம் மிஷன் பணிகள் குறித்து விபரங்களை அறிய தொடர்பு கொள்ளுங்கள்.

**வங்கி விபரம்:**

வங்கியின் பெயர் : TD Canada Trust
Toronto Harvest Missionary Church
A/C No. : 00330 - 5004114
Toronto, Mccowan - Canada




# ஜெபம் பண்ணுங்கள்! பங்காளர் ஆகுங்கள்!

## இலங்கையில் பயிற்சி நிலைய கட்டிட வேலைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

BLESSING HANDS MISSION VOCATIONAL TRAINING CENTRE
IN MAYILAMBAVELI, BATTICALOA.

## பயிற்சி நிலையம்!

இலங்கையில் மொத்தமாக 38,000 கிராமங்களுக்கு மேலே காணப்படுகின்றது. இக்கிராமங்களுக்குள், அநேக சிறுபிள்ளைகளும் வாலிபர்களும் வாழ்கின்றார்கள். அப்படிப்பட்டவர்களின் எதிர்காலம், ஆண்டவராகிய இயேசுவினாலே மாற்றப்பட அங்கே அவர்களை அதற்கேற்றபடி அந்த சிறுபிள்ளைகள் வாலிபர்களின் வாழ்க்கை உருவாக்கப்பட வேலையாட்கள், அதிகமாய் தேவையாய் இருக்கின்றது.

இவ்வாலிபர்கள் பயிற்சிவிக்கப்படவும், இக்கிராமங்களுக்கு அனுப்பப்படவுமே பயிற்சி நிலையம் ஒன்றை கட்ட ஆரம்பித்திருக்கிறோம். இப்பயிற்சி நிலையம் கட்டப்பட்டதும், 100 வாலிபர்களை இந்தப் பயிற்சி நிலையத்துக்கு அழைத்து வந்து 6 மாத காலம் அங்கே அவர்களை தங்க வைப்போம். அவர்கள் இந்த 6 மாத காலங்களுக்குள்ளே நடைமுறையிலே பயிற்றுவிக்கப்படுவார்கள். பயிற்சி முடிந்ததும் இவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு கிராமங்களுக்கு அனுப்பி வைக்கப்படுவார்கள். அவர்கள் அங்கு சென்று அம்மக்களுடன் வாழ்ந்து, அவ்வவ் கிராமங்களில் இருக்கும் வாலிபர்களை, சிறுபிள்ளைகளை சந்தித்து, அவர்களை எதிர்காலத்தின் ஆசீர்வாதமுள்ள சந்ததியாக மாற்றுவார்கள்.

இந்த கட்டிட திட்டம் நிறைவேறவும், செயலாற்றப்படவும் 10 கோடி ரூபா இலங்கைப் பணம் தேவைப்படுகின்றது. இது நிறைவேற நீங்களும் பங்காளராக இணைந்து கொள்ள முடியும், மேலதிக விபரங்களுக்கு எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

---

# எமது கிளைச்சபையின் ஞாயிறு ஆராதனைகள்!

**மொன்றியலில்! ஞாயிறு மாலை 4:00 மணி**

**Montreal Harvest Missionary Church**
12301 Colin Street, Pierrefonds,
Montreal, Quebec, H9A 1C3
Bro. Sutha - (514) 344 . 1879
Bro. Lawrence - (514) 880 . 5474
Bro. Mahesan - (514) 620 . 8153




**மிசிசாகாவில்! ஞாயிறு மாலை 4:00 மணி**

**Mississauga Harvest Missionary Church**
2570 Haines Road, Unit 1A,
Mississauga, ON, L4Y 4A3
For More information:
(416) 438 - 5200
(416) 289 - 3662

# வாலிபர் விழா








## இதைச் சொன்னேன், இதைச் செய்வேன்.

வருகின்ற வருடம் 2016 இல் இலங்கையிலுள்ள முழு மாவட்டங்களிலும் இருந்து 25,000 இற்கும் மேற்பட்ட வாலிபர்கள் ஒன்றுகூடி வர ஏற்பாடு செயப்பட்டு வருகின்றது.

தேவன் சொன்னபடி 2016 ஏப்ரல் மாதத்தில், இலங்கையின் எல்லா மாவட்டங்களில் இருந்தும், 25,000 இற்கும் மேற்பட்டதாகிய சிங்கள-தமிழ், ஆண்-பெண் வாலிபர்கள் மட்டக்களப்பு நகரத்தில் அமைந்துள்ள பிரதான மைதானத்தில் கூட்டிச் சேர்க்க, திட்டமிடப்பட்டுள்ளது. இவர்களுக்கான போக்குவரத்துக்கள் முதல்கொண்டு உணவு, தங்குமிட வசதிகள் செய்து கொடுப்பதற்கு ஏற்பாடுகளை செய்து வருகின்றோம்.

## இந்த ஒன்றுகூடலின் திட்டம்




இந்த 3 நாட்களிலும் கூடி வரும் வாலிபர்களாகிய இவர்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருந்தவர்கள். கடந்த யுத்த நாட்களில் வந்த பாதிப்புகள், சுனாமி வெள்ளம் போன்ற இயற்கை சீற்றங்களால் பாதிப்புக்கள், சொந்தக் குடும்பங்களினாலே ஏற்பட்ட பாதிப்புகள், தங்கள் பலவீனங்களினாலே வந்த பாதிப்புகள், அத்தோடு, சிறுவயதிலேயே குடி போதையினாலும், போதை வஸ்துக்களினாலும், காம விகாரங்களினாலும் பாதிக்கப்பட்டு தளர்ந்து போனவர்கள். இப்படி பாதிக்கப்பட்ட இவர்களை, கடந்த 2011 இலிருந்து 2014ம் ஆண்டுவரை பல மாவட்டங்களிலும் இருந்து கூட்டிச் சேர்த்தோம். தேவன் அவர்களை எவ்விதமாய் வாழ உருவாக்கினார் என்றும், அவர்களுடைய வாழ்க்கையை எவ்வாறு ஆசீர்வாதமாக மாற்றமுடியும் என்றும் கற்றுக் கொடுத்தோம். இக்கூட்டங்களுக்கு பின்பு, எதிர்பார்த்ததுபோலவே அவர்களுடைய வாழ்க்கை மாற்றப்பட்டது. இந்த இடைப்பட்ட காலங்களுக்குள், அவர்களுடைய வாழ்க்கையின் மாற்றத்தைப் பார்க்கும்பொழுது, இது தங்களுக்கு மட்டுமல்ல, தேசம் முழுவதிலும் உள்ள மற்றும் அனைத்து வாலிபர்களுக்கும், சிறுபிள்ளைகளுக்கும் சொல்லப்பட்டு, அவர்கள் வாழ்வும் மாற்றப்பட வேண்டும் என்பதே இவர்களுடையதும் இந்தப் பகுதிகளில் இருக்கின்ற போதகர்கள், பட்டணத்து தலைவர்களுடைய வாஞ்சையுமாக இருப்பதை அவதானிக்கக் கூடியதாக இருக்கின்றது.

இதைத் தவிர இலங்கையில் இன்னும் பல மாவட்டங்களில் அநேக சிறுபிள்ளைகளும் வாலிபர்களும் வாழ்கிறார்கள். அவர்களுடைய எதிர்காலமும் ஆண்டவர் இயேசுகிறிஸ்துவினாலே மாற்றப்படவும், அவர்களுடைய வாழ்வு ஆசீர்வாதமாக உருவாக்கப்படவும் வேலையாட்கள் அதிகமாக தேவைப்படுகின்றார்கள்.



எனவே 2016ம் ஆண்டு கூட்டிச் சேர்க்கப்படவிருக்கிறதாகிய 25 ஆயிரம் வாலிபர் களுக்கு இன்னும் கற்றுக் கொடுக்கப்படவும், அவர்கள் இலங்கையிலுள்ள அனைத்து மாவட்டங்களிலும், கிராமங் களிலும், ஆசீர்வாதமாக வாழ செய்ய வைப்பதுமே இந்த ஒன்றுகூடலின் பிரதான நோக்கமாக இருக்கின்றது.

இத்திட்டத்திற்காக ஜெபம் பண்ணுங்கள். ஒரு வாலிபனை இவ்வாறு கொண்டு வந்து, பயிற்றுவித்து அனுப்புவதற்கு, போக்குவரத்து முதல் தங்குமிட வசதிகள், 3 நாட்களுக்குரிய உணவு, தேநீர், சிற்றுண்டி மற்றும் அத்தியாவசிய தேவைகளை பூர்த்தி செய்வதற்கு 50 கனேடிய டொலர்கள் தேவைப்படுகின்றது. நீங்களும் இவர்களில் சில வாலிபர்களின் செலவுகளை பொறுப்பெடுத்து இத்திட்டத்தில் இணைந்து கொள்ள முடியும். விரும்பியவர்கள் கீழ்க்காணும் இப்படிவத்தினை நிரப்பி எங்களுக்கு அனுப்பி வைக்க முடியும்.

---

### முழு உலகத்திற்கும் ஆசீர்வாதமான இலங்கை தேசம்!

**1** வாலிபன் - $ 50.00 ☐ **5** வாலிபர் - $ 250.00 ☐ **10** வாலிபர் - $ 500.00 ☐ **20** வாலிபர் $ 1000.00 ☐

உங்கள் பெயர் : .................................... தொலைபேசி இல. : ....................................

விலாசம் : .................................... Email: : ....................................

.................................... ஏனைய விரும்பிய தொகை : ....................................

| வங்கி விபரம் : | தபால் மூலம் அனுப்புவதாயின் |
|---|---|
| வங்கியின் பெயர் : TD Canada Trust<br>Toronto Harvest Missionary Church<br>A/C No. : 00330 - 5004114<br>Toronto, Mccowan - Canada | Toronto Harvest Missionary Church<br>1180 Bellamy Road North,<br>Scarborough, ON.<br>M1H 1H2, Canada |

**கர்த்தர் தந்த தரிசனத்தை நம் மண்ணில் நிறைவேற்ற ஜெபத்தாலும் உதவிகளாலும் உங்கள் அன்புக்கரங்களை இணைத்துக் கொண்ட ஒவ்வொருவருக்கும் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.**

# ரொறன்ரோ அறுவடை மிஷனறி சபை



## அன்புடன் அழைக்கின்றோம்!!!

நீங்கள் எதிர்பார்த்திருக்கும் ஆசீர்வாதத்தைப்
பெற்றுக்கொள்ளும்படிக்கு குடும்பமாக கடந்துவந்து
உங்கள் வியாதி, வேதனை, பிரச்சனைகளிலிருந்து விடுதலையடைந்து
தேவனுடைய நன்மையினாலும் சம்பூரணத்தினாலும் ஆசீர்வதிக்கப்படுங்கள்!

### எமது ஞாயிறு ஆராதனை

பிரதி ஞாயிறுதோறும் காலை 9:00. காலை 10:30, மாலை 6:00 மணிக்கு

## The Blessing Centre

**1180 Bellamy Road North, Scarborough, ON., M1H 1H2**

**வளர்ந்து வரும் வாலிப சமுதாயத்தைக் கருத்திற் கொண்டு ஆங்கிலத்திலும் தமிழிலும் எமது ஆராதனை நடத்தப்படுகின்றது.**

### ஞாயிறு ஆராதனை

காலை 09:00 – 10:30 மணிவரை – ஆங்கில ஆராதனை
காலை 10:30 – 12:30 மணிவரை – தமிழ் ஆங்கில ஆராதனை
மாலை 06:00 – 08:00 மணிவரை – மாலை ஆராதனை (தமிழ்)

**காலை 09:30 - 10:20 மணிவரை**

- வாலிபர்களுக்கான ஆராதனை
- சிறுபிள்ளைகளுக்கான ஓய்வுநாள் பாடசாலை
- பெரியோர்களுக்கான வேதப்படிப்பு (தமிழ்)

### வேதப்படிப்பு

பிரதி புதன்தோறும் இரவு 7:30 மணிமுதல் 9:00 மணிவரை

### வாலிபர்களுக்கான ஐக்கியம்

பிரதி வெள்ளிதோறும் இரவு 7:30 மணிமுதல் 9:00 மணிவரை

### ஜெப மண்டபத்தில்!

பிரதி செவ்வாய்க்கிழமைதோறும் காலை 09:30 முதல் 11:30 மணிவரை தேவ பிள்ளைகள் ஒன்றாகக் கூடி சகல விண்ணப்பங்களுக்காகவும் ஜெபம் செய்து வருகின்றோம்.

### இரவு ஜெபம்!

மாதத்தின் 2வது வெள்ளி இரவு 8:00 மணிமுதல் நள்ளிரவு 12:00 மணிவரை நம் பட்டண மக்களுக்காகவும், நம் தேச மக்களுக்காகவும் ஒன்றுகூடி விழித்திருந்து ஜெபித்து வருகின்றோம்.

### உபவாசக்கூட்டம்!

மாதத்தின் 4வது சனிக்கிழமை காலை 10:00 மணிமுதல் பி.ப. 1:00 மணிவரை நம் பட்டண மக்களின் தேவைகளுக்காகவும், நம் தேச மக்களுக்காகவும் ஒருமனப்பட்டு உபவாசித்து ஜெபித்து வருகின்றோம்.

### வீட்டுக்கூட்டங்கள்

| | | | |
|---|---|---|---|
| வெள்ளிக்கிழமைகளில் இரவு 7:30 மணிக்கு | வெள்ளிக்கிழமைகளில் இரவு 7:30 மணிக்கு | வெள்ளிக்கிழமைகளில் இரவு 7:30 மணிக்கு | சனிக்கிழமைகளில் இரவு 7:00 மணிக்கு |
| **Rouge River/Shep**<br>23 Rouge River Dr.<br>Scarborough | **Kennedy & Elles.**<br>103 Gilroy Dr.<br>Scarborough | **Deanpark/Sheppard**<br>69 Blackloft Dr.<br>Scarborough | **Parliament & Dundas**<br>246 Sackville Street # 707<br>Toronto |
| 647-763-9061 | 416-315-6140 | 416-492-7024 | 416-361-3371 |

### கிளைச்சபை ஆராதனைகள்

| | | |
|---|---|---|
| ஞாயிறு மாலை 3:00 மணி | ஞாயிறு மாலை 4:00 மணி | ஞாயிறு மாலை 3:00 மணி |
| **Frankfurt Harvest Church**<br>Nibelungenallee 54,<br>60318 Frankfurt, Germany | **Montreal Harvest Missionary Church**<br>12301 Colin Street, Pierrefonds<br>Montreal, QC, H9A 1C3, Canada | **Mississauga Harvest Missionary Church**<br>2570 Haines Road, Unit 1A,<br>Mississauga, ON, L4Y 4A3, Canada |

### மேலதிக விபரங்களுக்கு:

Tel.: (416) 438 - 5200
(416) 289 - 3662

Web.: www.thmc.net
email: info@thmc.net


"Pastor Vincent" Join as a friend

ரொறன்ரோ அறுவடை மிஷனரி சபையின் 20வது நிறைவாண்டு

# விடுதலைப் பெருவிழா




2015

## அற்புத சுகவாழ்வு ஆசீர்வாத பெருவிழா!

2015, ஜுலை 3 வெள்ளி மாலை 7:00 மணி (அற்புத சுகமளிக்கும் ஆராதனை)
2015, ஜுலை 4 சனி மாலை 7:00 மணி (அற்புத சுகமளிக்கும் ஆராதனை)
2015, ஜுலை 5 ஞாயிறு காலை 10:30 மணி (ஞாயிறு விசேட ஆராதனை)
2015, ஜுலை 5 ஞாயிறு மாலை 6:00 மணி (அற்புத சுகமளிக்கும் ஆராதனை)

## இது உங்கள் அற்புதத்தின் நேரம்!

சிறப்புச் செய்தி
**பாஸ்டர் டில்குமார்**

நடைபெறும் இடம்:
**The Blessing Centre**
1180 Bellamy Road North,
Scarborough, ON
M1H 1H1, Canada
Main Intersection:
(Bellamy/Progress)

பாஸ்டர் வின்சன்ட் சகாயநாதன்

கடந்தகால கூட்டங்களில் கலந்து கொண்டவர்கள் பெற்ற உடனடி அற்புதங்களும் சுகங்களும்!







**மேலதிக விபரங்களுக்கு:**

Tel.: (416) 438 - 5200
(416) 289 - 3662

Web.: www.thmc.net
email : info@thmc.net




"Pastor Vincent" Join as a friend